# கதை மணி மாலை

(ஆறும் வகுப்புக்கு உரிய துணைப்பாட நூல்)

அரசாங்கத்தார் அங்கீகரித்தது
கெஜட் தேதி 10-5-61 பக்கம் 10,

ஆசிரியர் :
புலவர் பா. முருகைய[illegible]
தமிழாசிரியர்,
சி. அப்துல் ஹகிம் இந்து-முஸ்லிம் உயர்நிலைப்பள்ளி
சென்னை-1.

**பாரத் பப்ளிஷர்ஸ்**
**12, பிரான்ஸிஸ் ஜோசப் தெரு,**
**தபாற்பெட்டி 26. சென்னை-1.**



[விலை 75 ந. பை.

# முன்னுரை

'கதை மணி மாலை' என்னும் பெயரினைக் கொண்டுள்ள இத்துணைப்பாட நூல் அரசியலார் அண்மையில் வெயிட்ட புதிய பாடத்திட்டத்தைத் தழுவி ஆறும் வகுப்புக்கு எழுதப்பெற்றதாகும்.

இந்நூலில் இனிமையும் எளிமையும் பொருந்திய செந்தமிழ் நடையில், அறிவால் உயர்ந்த அருங்கலைச் செல்வர் இருவரைப் பற்றிய சுவை மிக்க கதைகள் சில இடம்பெற்றுள்ளன. சிறந்த அறிவுத்திறனும், எதனையும் ஆராய்ந்து அறியும் ஆற்றலும், சொல்வன்மையும் சிறுவர்பால் செம்மையாக அமைந்தால் தான் அன்னாரது பிற்கால வாழ்வு பெரிதும் சிறக்கும். இளமையில் கற்பிக்கப் படும் சிறந்த கருத்துக்கள் ஒருவரது உள்ளத்தில் பசுமரத்தாணி போன்று பதியும். அந்த நோக்கத்துடன்தான் இந்நூலில் இளைஞர்களுக்கு மதி நுட்பம் நல்கவல்ல கதைகள் சில அமைக்கப் பெற்றுள்ளன.

தித்திக்கும் தேன் போன்ற தீந்தமிழ் நடையில் சுவைமலிந்த சொல்லோவியமாகத் தீட்டப்பெற்றுள்ள இந்நூலினைக் கண்ணுறும் ஆசிரியப் பெருமக்களும், அறிஞர்களும் இளைஞர்களின் உள்ளமாகிய விளைநிலத்தில், அறிவு என்னும் நீர் பாய்ச்சிச் செந்தமிழ்ப் பயிரைச் சீரிய முறையில் வளர்க்க உறுதுணை புரிய வேண்டுகிறேன்.

ஆசிரியர்.

# துணைப் பாடம்

## ஆறும் வகுப்பு

---

## பொருளடக்கம்

# 1. நகைச்சுவைப் புலவர் பீர்பால்

கி. பி. பதினாரும் நூற்றுண்டில் வட இந்தியா வில் மொகலாயப் பேரரசு மேன்மையுற்று விளங் கியது. பேரரசர் அக்பர் தமது பெருந்தன்மையால் இந்துக்களும் முஸ்லிம்களும் ஒற்றுமையுடன் வாழும் படி செய்தார்; குடிமக்கள் அனைவரையும் சமமாகப் பாவித்து வந்தார் ; அறிவிலும் ஆற்றலிலும் உயர்ந்த இராசபுத்திர வீரர்களைத் தம்முடைய உயிர் நண்பர் களாகவும், அறிவுரை கூறும் அமைச்சர்களாகவும், படைத்தலைவர்களாகவும் கொண்டிருந்தார். கலைஞர் களும், கவிஞர்களும், அறிஞர்களும் அக்பர் அவை யில் பெருஞ் சிறப்புப் பெற்றனர். அவரது அவையில் பீர்பால் என்பவர் நகைச்சுவைப் புலவராக (விகட கவியாக) விளங்கினர். பேரரசருக்கும், அவையோர் களுக்கும் ஏற்படும் உள்ளச் சோர்வைத் தமது நகைச்சுவை ததும்பும் நயமொழிகளால் போக்கும் பணியில் பீர்பால் தலைசிறந்தவராக விளங்கினர். அவர் தமது நுண்ணறிவினுல் அக்பர் மனமகிழும் அருஞ்செயல்கள் பலவற்றைச் செய்துள்ளார். பீர் பாலைப் பற்றி நம்நாட்டில் வழங்கும் கதைகள் பல வாகும். அவற்றுள் சுவைமிக்க சிலவற்றை இங்குக் காண்போம்.

## 1. பீர்பால் நகைச்சுவைப் புலவர் ஆதல்

கோதாவரி நதிக்கரையில் மர்ஜால் என்னும் சிற்றூர் ஒன்று உள்ளது. அது நிலவளத்திலும் நீர்

வளத்திலும் உயர்ந்தது. அச்சிற்றூரில் காளிதாசர் என்னும் மறையவர் வாழ்ந்து வந்தார். அவருடைய மனைவியார் கணவர் குறிப்பறிந்து வாழும் இயல்பின ராக இருந்தார். அப்பெற்றோருக்கு ஆண்மக்கள் மூவர் பிறந்தனர். அம்மூவருள் இளையவர் பீர்பால் ஆவர். பீர்பால் சிறுவராக இருந்தபோதே அவரது தந்தையும் தாயும் இறந்து விட்டனர். உடன்பிறந் தார் இருவரும் பீர்பாலைக் கவனியாது விட்டனர். எனவே ஆதரவு அற்ற நிலையில் விடப்பட்ட பீர்பால் தமது இளமை பருவத்தில் பல இடையூறுகளுக்கு ஆளானார். துன்பச்சுமை அவருக்குத் தொல்லை கொடுத்தது. எனினும் இயற்கையிலேயே நுண் ணறிவு அமையப் பெற்றிருந்த அவர், அத்துன்பங் களைப் பொருட்படுத்தாமல் வாழ்ந்து வந்தார்.

பீர்பால் தக்க பருவத்தில் மங்கை நல்லாள் ஒருத்தியை மணம் புரிந்து கொண்டு இல்லற வாழ் வில் ஈடுபட்டார். வறுமையால் அவரது குடும்பம் வாட்டமுற்றது. அவர் தம் மனைவியுடன் பேரரசர் வாழும் டில்லிமாநகருக்கு வந்து சேர்ந்தார். அப் பெருநகரில் ஒரு செல்வந்தரின் உதவியால் புரோகி தத் தொழிலைச் செய்து வந்தார். அவரது நகைச் சுவைப் பேச்சும், மதிநுட்பமும் மக்கள் உள்ளத்தைக் கவர்ந்தன, அவர்கள் அவரைப் போற்றிப் புகழ்ந்தார் கள். பீர்பாலைப் பற்றிய புகழுரைகள் பேரரசர் அக் பரின் செவிகளிலும் விழுந்தன. அவர் பீர்பாலை அழைத்துவரச் செய்து அவரைத் தம்முடைய அவை யில் நகைச்சுவைப் புலவராக அமர்த்திக்கொண்டார்.

அரசவையில் பீர்பாலின் நகைமொழியும், அறிவு நுட்பமும் அனைவரது உள்ளத்தையும் கவர்ந் தன. பீர்பால் பேரரசரின் பெருமதிப்பிற்கும், பேரன் பிற்கும் உரியவரானார். அவர் உருது, பெர்சியம், வடமொழி முதலிய பல மொழிகளையும் நன்ருகக் கற்றுத் தேர்ச்சிபெற்ருர்; வடமொழியில் உள்ள இரா மாயணத்தையும், பாரதத்தையும் பெர்சிய மொழி யில் பெயர்த்து எழுதினுர். இச்செயலால் பீர்பாலின் பெருமை மேலும் உயர்ந்தது. மொகலாயப் பேரரசர், பீர்பாலுக்கு இராஜா என்ற சிறப்புப் பெயரை அளித்தார்.

## 2. முட்டாள்களுடன் பழகும் முறை

ஒருநாள் அக்பர் பீர்பாலை நோக்கி, "பீர்பால், முட்டாள்களுடன் பழக வேண்டுமானுல் என்ன செய்யவேண்டும்?" என்று அவர் வினவினுர். அவர் அக்பரின் சொற்களைக் கேளாதவர் போலப் பேசாது இருந்தார். பேரரசர் மீண்டும் ஒரு முறை விகட கவியைப் பார்த்து, "என்ன பீர்பால்! உன்னைத் தான் கேட்கிறேன்? முட்டாள்களுடன் பழக வேண்டுமானுல் என்ன செய்யவேண்டும்?" என்று உரத்த குரலில் கேட்டார். அப்போதும் பீர்பால் வாய் திறக்க வில்லை. அவர் பேசாத கற்சிலைபோன்று இருந்தார்.

பேரரசர் உள்ளம் பெரும் புயலாக மாறியது. பெருஞ்சினங் கொண்ட அவர் கண்கள் கோவைப் பழமெனச் சிவந்தன. "இந்தப் பீர்பாலுக்கு எவ் வளவு செருக்கு! என்னைச் சிறிதும் மதிக்கவில்லையே

இந்த அற்பன்! உண்ண உணவின்றி, உடுக்க உடையின்றி, இருக்க இடமின்றித் தவித்த இவனுக்குச் சீரும் சிறப்பும் அளித்துப் பேரும் புகழும் பெறச் செய்த என்னையே மதிக்கவில்லையே இந்த இழிந்தவன்!'' என்று பலவாருகச் சிந்தித்தது அவரது உள்ளம். அவர் மிகவும் கடுமையான குரலில், "என்ன பீர்பால், உன் காதுகள் செவிடாகப் போய்விட்டனவோ? அல்லது என்னை அவமதிக்கும் நோக்கத்துடன் இவ்வாறு பேசாமல் இருக்கின்ருயா? வாய்திறந்து உடனே மறுமொழி யளிக்காவிடில் உனக்குக் கடுமையான தண்டனை அளிப்பேன்,'' என மொழிந்தார்.

அப்போது பீர்பால் அக்பரை நோக்கி, "அரசர் பெருமானே! என்மீது சினங் கொள்ளவேண்டா. தாங்கள் கேட்ட கேள்விக்கு அப்போதே விடையளித்துவிட்டேனே!'' என அமைதியுடன் கூறிஞர். பேரரசருக்குப் பெருவியப்பு உண்டாயிற்று. அவர் பீர்பாலிடம், "என்ன! நீ எப்போது விடையளித்தாய்! நான் கேட்கக் கேட்கப் பேசாத பதுமை போன்று அல்லவா இருந்தாய்? இதுதான் எனது கேள்விக்கு நீ கூறும் விடையோ!'' என்று ஏளனந் தோன்றக் கூறிஞர். அவ்வமயம் "ஆம், மன்னர் பெருமானே! முட்டாள்களுடன் பழக வேண்டுமாஞல் பேசாமல் இருத்தலே பெரிதும் நன்மை தரும்,'' என்று கூறிஞர் பீர்பால். அவரது சொற்கள் அக்பரைத் திடுக்கிட வைத்தன. சினத்தின் மிகுதியால் சிந்தை தடுமாறிய தமது நிலைக்குப்

பேரரசர் பெரிதும் வெட்கம் அடைந்தார். அவர் பீர்பாலின் அறிவுத்திறனைப் பாராட்டிப் புகழ்ந்து அவருக்குப் பல பரிசில்கள் அளித்தார்.

## 3. பீர்பால் குழந்தையாக மாறினார்

பீர்பால் ஒருநாள் அரசவைக்கு உரிய காலத்தில் வாராமல் நேரம் கழித்து வந்தார். அப்போது அரசர், "பீர்பால்! இன்று அரசவைக்கு வருவதற்குச் சுணக்கம் ஏற்பட்டது எதனால்?" எனக்கேட்டார். அவர் மன்னரை நோக்கி, "அரசர் ஏறே! என்னை மன்னிக்க வேண்டுகின்றேன். நான் இன்று அரசவைக்கு வருவதற்காக நீண்ட நேரத்திற்கு முன்பே புறப்பட்டு விட்டேன். அப்போது என்னுடைய மைந்தன் அழத் தொடங்கிவிட்டான். அவனுக்கு ஆறுதல் கூறி அமைதிப் படுத்துவதற்குள் இவ்வளவு காலம் கடந்துவிட்டது!" என மொழிந்தார்.

அக்பர் வியப்புடன், "என்ன! அழும் குழந்தையை அமைதிப் படுத்துவதற்கு இவ்வளவு நேரமா? என்னால் நம்ப முடியவில்லையே! என்று கூறினார். "அரசர் பெருமானே! தாங்கள் நினைப்பதுபோன்று அழுது அடம்பிடிக்கும் குழந்தையை அமைதிப்படுத்துவது எளிய செயல் அல்ல" என்றார் பீர்பால். அவ்வமயம் பேரரசர், "பீர்பால் நீ சொல்வது முற்றிலும் தவறு. நானாக இருந்தால் அழும் குழந்தையை மிகவிரைவில் சிரிக்கச் செய்வேன்!" என்று கூறினார்.

உடனே பீர்பால், "அரசர் பெருமானே! நான் இப்போது குழந்தையாக நடித்து அழுகிறேன். தாங்

கள் என்னை அமைதிப் படுத்துங்கள், பார்க்கலாம்,'' என்று கூறினர். பேரரசர் அதற்கு இணங்கவே பீர்பால், 'ஓ' என்று அலறி அழத் தொடங்கிவிட்டார். அக்பர் குழந்தைக்கு ஆறுதல் கூறும் தந்தையாக மாறினர். அவர் "அழாதே கண்ணே! அழாதே, உனக்கு என்ன வேண்டும்? கண்ணைப் பறிக்கும் வண்ணப் பதுமைகள் வேண்டுமா? இனிக்கும் கனிகள் வேண்டுமா? மிட்டாய் வேண்டுமா? விளையாட்டுச் சாமான்கள் வேண்டுமா? வேறு என்ன வேண்டும்? வேண்டியவற்றை யெல்லாம் கொடுக்கிறேன். அழுகையை நிறுத்தடா!'' என் அருமை மகனே!'' எனக் கொஞ்சினர்.

ஆனல் குழந்தை பீர்பால் அழுகையை நிறுத்தினர் அல்லர். பேரரசருக்கு என்ன செய்வது என்றே புரியவில்லை. அவர் பக்கத்தில் பழத்தட்டில் பழங்கள் பல வைக்கப்பட்டிருந்தன. பீர்பாலின் கண்கள் பழத்தட்டை நோக்கின. அப்போது அக்பர், "அழாதே குழந்தை! இந்தா பழங்கள்! வேண்டியதை எடுத்துக்கொள்,'' எனக் கூறினர். அப்போதும் பீர்பால் அழுதுகொண்டே பழத்தட்டில் இருந்த ஒரு கரும்புத்துண்டை எடுத்து அக்பர் கையில் கொடுத்து 'இதை நறுக்கித்தா' என்று கூறினர். பேரரசர் அக்கரும்புத் துண்டைச் சிறு சிறு துண்டுகளாக நறுக்கி, "அழுகையை நிறுத்தடா, என் ஆருயிர்ச் செல்வமே'' என்று கூறிக்கொண்டே, பீர்பாலின் கையிற் கொடுத்தார். அவ்வமயம் பீர்பால் அந்தக் கரும்புத்துண்டுகளை யெல்லாம், தூக்கியெறிந்து

விட்டு " இந்தத் துண்டுகளை யெல்லாம் ஒட்டி ஒரே துண்டாக்கிக் கொடு" என்று கூறிப் பெருத்த குரலில் அழத் தொடங்கிவிட்டார்.

பீர்பாலின் இந்த வேண்டுகோளை அக்பரால் நிறைவேற்ற முடியவில்லை. வேறு கப்புத் துண்டுகளைக் கொண்டு வரச்செய்து குழந்தைக்குக் கொடுத்தார். ஆனல் குழந்தை பீர்பால் அவற்றைப் பெற்றுக்கொள்ள மறுத்து, நறுக்கிய துண்டுகளை ஒட்டியே தரவேண்டும் என்று பிடிவாதம் செய்தார். இறுதியில் பேரரசர் அக்பர் தமது தோல்வியை ஒப்புக் கொண்டார்.

## 4. பீர்பால் பிள்ளை பெற்ருர்

மொகலாயப் பேரரசர் ஒருமுறை பீர்பாலின் அறிவுத்திறனைச் சோதிக்க விரும்பினர். எனவே அவர் பீர்பாலை அழைத்து வரச்செய்து அவரிடம் எருதின்பால் ஓர் ஆழாக்குக் கொண்டுவரும்படி கட்டளை இட்டார். பேரரசர் கட்டளையைக் கேட்டதும் பீர்பால் சிறிது நேரம் திகைத்து நின்ருர். எருது எப்படிப்பால் கொடுக்கும்? எனச் சிந்தித்தார். ஆயினும் அவர் தம்முடைய உள்ளத்து உணர்ச்சிகளை வெளிக் காட்டாமல் அடக்கிக்கொண்டு, "மன்னர் பெருமானே! பத்து நாட்கள் தவணை கொடுங்கள். எப்படியாவது எருதின்பாலைக் கொண்டு வருகிறேன்" என்று கூறினர். விட்டுக்கொடுக்காமல் வீரம் பேசும் பீர்பாலின் செய்கையை அக்பரால் புரிந்துகொள்ள முடியவில்லை. ஏதோ ஒரு திட்டத்தை உள்ளத்தில் வைத்துக் கொண்டுதான் அவர் இப்படிச் சொல்கிருர்

என்று நினைத்த அக்பர், “பீர்பால்! உன் விருப்பப் படியே பத்து நாட்கள் தவணை கொடுக்கிறேன். எப் படியாயினும் எருதின் பாலைக்கொண்டுவா,” எனக் கூறி விடை கொடுத்தார்.

பீர்பால் ஆழ்ந்த சிந்தனையுடன் இல்லத்திற்குத் திரும்பினார். அவரது உள்ளத்தில் ஓர் அரிய திட்டம் உருவாயிற்று. அவர் தமது மனைவியை அழைத்துத் தம்முடைய திட்டத்தை விளக்கிக் கூறினார். அதற்கு அவளும் உடன்படவே, பீர்பால் வீட்டைவிட்டு வெளியே செல்லாமல் நல்ல முறையில் ஓய்வு எடுத் துக்கொண்டு ஒன்பது நாட்களைக் கழித்தார்.

ஒன்பதாம் நாள் நள்ளிரவில் அவர் தம்முடைய மனைவியை அழைத்து ஒரு பெரிய அழுக்குத்துணி மூட்டையை அவள் கையிற்கொடுத்து, “பெண்ணே! நான் கூறியபடியேசெய்,” என்று கூறி அனுப்பினார். அவள் அந்தத் துணிமூட்டையை எடுத்துக்கொண்டு அரண்மனைக்கு அருகில் உள்ள குளத்திற்குச் சென்றாள்; அக்குளத்தின் படிக்கட்டின்மீது துணி களை மோதிப் பேரொலி எழுப்பிய வண்ணம் துவைக்கத் தொடங்கினாள்.

நள்ளிரவில் அயர்ந்து உறங்கிக் கொண்டிருந்த அக்பர் பீர்பாலின் மனைவி துணிகளை,மோதித் துவைப் பதனால் எழும் ஒலியைக்கேட்டு உறக்கம் கலைந்தார். அவர் காவலரை அழைத்து, “அரண்மனைக்குளத்தில் துணி துவைப்பவர் யாவராயினும் இங்கு அழைத்து வருக,” என ஆணையிட்டார். காவலர் விரைந்து குளக்கரைக்குச் சென்றனர்; அங்கு மங்கையொருத்தி

படிக்கட்டின் மீது உட்கார்ந்து கொண்டு துணிகளை அடித்துத் துவைத்துக் கொண்டிருப்பதைக் கண்டனர். காவலர்கள் அவளை அழைத்துச் சென்று பேரரசர் முன்னிலையில் நிறுத்தினர்கள். அப்போது மன்னர் அவளை நோக்கி, "பெண்ணே! நீ யார்? இந்த நள்ளிரவில் நீ துணிகளைத் துவைக்க வந்தது எதனுல்?" என்று வினவினர்.

அதற்கு பீர்பாலின் மனைவி, "அரசர் பெருமானே! தங்கள் குடை நிழலில் குறையின்றி வாழும் குடிமக்களுள் யானும் ஒருத்தியாவேன். என் கணவர் ஒருவாரத்திற்கு முன்பு ஓர் ஆண் குழந்தையைப் பெற்றெடுத்தார். எனக்குப் பகல் முழுதும் ஓய்வு கிடைக்கவில்லை. வீட்டில் எல்லா வேலைகளையும் முடித்துவிட்டு இந்த நள்ளிரவில் துணிகளைத் துவைக்க வந்தேன். எனது செய்கையால் தங்கள் உறக்கத்திற்கு இடையூறு நேர்ந்துவிட்டது. எனது பிழையை மன்னிக்க வேண்டுகிறேன்," எனக் கூறினள்.

இதைக்கேட்டதும் அக்பருக்குப் பெருவியப்பு உண்டாயிற்று. பின்னர் அவர் இந்தப் பெண் நம்மை ஏமாற்ற நினைக்கிருள் என நினைத்துச் சிறிது சினத்துடன் "பெண்ணே! யாரிடம் கதை அளக்கிருய்? உலகில் எங்கும் எப்போதும் நடவாத புதுமையைக் கூறுகிருயே! ஆண்மகன் பிள்ளைபெற்ருன் என்பதைக் கூறி என்னை ஏமாற்ற யாரிடம் கற்ருய்?" எனக்கேட்டார். அப்போது அப்பெண் மகள், "மன்னர் எருதின் பால் கொண்டுவரும்படி

ஆணையிடும் நாட்டில் ஆண்மக்கள் பிள்ளை பெறு வது எவ்வாறு விந்தையான நிகழ்ச்சியாகும்?'' என மறுமொழி கூறினாள். அவளுடைய அறிவுத் திறன் வாய்ந்த சொற்களிலிருந்து, அவள் பீர்பாலின் மனைவி என்பதனைப் பேரரசர் புரிந்துகொண்டார். அவளுக்கு நிறைய பரிசில்கள் அளித்து அனுப்பி வைத்தார்.

## 5. வறியோனுக்கு வாழ்வு அளித்த பீர்பால்

டில்லியில் ஒருமுறை குளிர்காலம் மிகவும் கடு மையாக இருந்தது. இரவில் குளிரின் கொடுமைக்கு அஞ்சி மக்கள் அனைவரும் வீடுகளில் அடைபட்டுக் கிடந்தனர். ஒரு நாள் அக்பரும் பீர்பாலும் உரை யாடிக் கொண்டிருந்தனர். அப்போது அரசர், "பீர் பால்! இந்த ஆண்டில் குளிர்காலம் மிகவும் கடுமை யாக இருக்கிறதல்லவா? இரவில் வெளியே தலைகாட் டவே முடியவில்லையே!'' எனக் கூறினர். அதனைக் கேட்ட பீர்பால், "அரசர்பெருமானே! குளிர்மிகவும் கடுமையாக இருக்கிறது என்பது உண்மையே! ஆனல் வாழ வழியின்றித் தவிக்கின்ற வறியவனுக்கு இந்தக் குளிரின் கொடுமை தெரியாது. உண்ண உணவும், இருக்க இடமும், உடுக்க உடையும் கிடைக்கும் என்ருல் ஏழை எதனையும் செய்யத் துணிவான்,'' எனக் கூறினர்.

பேரரசர் அக்பர், "பீர்பால்! அப்படியானல் நீ சொல்லியபடி நடைபெறுமா என்பதனை அறிவோம்,'' எனக்கூறிவிட்டு, "இந்தக் கடுங்குளிர் காலத்தில் ஒருநாள் இரவு முழுவதும் யமுனை நதியில் நின்று

கொண்டிருப்பவர் யாராயினும், அவருக்குப் பத்தாயிரம் பொன் பரிசு அளிக்கப்படும்,'' என அறிவித்து நகரெங்கும் பறை கொட்டும்படி கட்டளை இட்டார். அரசரின் ஆணைப்படி டில்லி மாநகரெங்கும் இச் செய்தி பறைகொட்டி அறிவிக்கப்பட்டது. வறியவன் ஒருவன் மன்னரைக் காண வந்தான். அவன் அரசரது கட்டளைப்படியே தான் செய்து காட்டுவதாகக் கூறினன். அக்பர் அவன் செயலைக் கண்காணிக்கும் பொருட்டுக் காவலர் இருவரை அவனுடன் அனுப்பி வைத்தார்.

"பத்தாயிரம் பொன் கிடைத்தால் எனது வறுமை தொலையும்; வாழ்வு வளம் பெறும். கந்தல் உடையை உடுத்திக் கலங்கி நிற்கும் என் மனைவியின் மனம் மகிழ்ச்சி அடையும். பிறந்ததுமுதல் துன்பம் ஒன்றையே துணையாகக் கொண்ட என் அருமை மைந்தனின் பிற்கால வாழ்வு பெரிதும் சிறப்பு அடையும்!'' என அந்த ஏழையின் உள்ளம் எண்ணியெண்ணி இன்பத்தை அடைந்தது. அவன் அன்றிரவு முழுமையும் உடலை வருத்தும் கடுங் குளிரைப் பொறுத்துக்கொண்டு யமுனை நதியில் நின்று கொண்டிருந்தான்.

மறுநாள் பொழுது புலர்ந்தது. போட்டியில் வெற்றிபெற்ற பூரிப்புடன் அந்த வறியவன் அரசரைக் காணச் சென்றுன். அவன் பேரரசரை அணுகித் தான்பெற்ற வெற்றியை எடுத்துரைத்தான். இரவெல்லாம் அவனைக் கண்காணித்து வந்த காவலரும் மன்னரிடம், "மன்னர் பெருந்தகையே! இந்த வறிய

வன் சிறிதும் வாட்டமின்றி யமுனை நதியில் நின்று கொண்டிருந்தது உண்மையே,'' என்று அறிவித்தனர்.

பேரரசர் சிறிது நேரம் சிந்தித்தார். பின்னர் அவர் அந்த வறியவனை நோக்கி, "நீ நேற்று இரவு முழுவதும் யமுனை நதியின் நீரில் நின்று கொண்டிருந்தது அரிய செயல் என்பதில் சிறிதும் ஐயமில்லை. அவ்வாறு நின்று கொண்டிருக்க உனக்குத் துணை செய்தது எது?'' என்று வினவினர்.

அப்போது அவ்வறியவன், "அரசர் பெருமானே! நான் யமுனை நதியில் நின்று கொண்டிருந்தபோது தங்கள் அரண்மனைச் சாளரத்தின் வழியே வந்த விளக்கொளியைப் பார்த்துக்கொண்டே யிருந்தேன். அதனுல் நேரம் கழிந்தது எனக்குத் தெரியவில்லை, அந்த வெளிச்சத்தின் துணையால்தான் நான் இரவு முழுவதும் கடுங்குளிரையும் மறந்து நீரில் நிற்க முடிந்தது!'' என்று கூறினன்.

அதனைக் கேட்ட அக்பர், "ஓ! அப்படியா செய்தி! நீ பரிசு பெறுவதற்குத் தகுதியற்றவன். இரவு முழுதும் குளிரில் நிற்பதற்குத் தேவையான வெப்பத்தை நீ அந்த விளக்கின் ஒளியிலிருந்து பெற்றிருக்கிருய். எனவே உனக்குப் பரிசு அளிக்கமுடியாது!'' என்ருர். வறியவனின் மனக்கோட்டை தகர்ந்தது. அவனுடைய ஆசைக்கனவுகள் யாவும் சிதைந்தன. ஏற்றமிக்க வாழ்வை எதிர்பார்த்து, இரவெல்லாம் ஆற்று நீரில் அஞ்சாது நின்று, கடுங்குளிரினுல் துன்புற்றுப் போட்டியில் வென்ற ஏழையின் உள்ளம்

ஏமாற்றம் அடைந்து நொந்தது. அவன் பீர்பாலிடம் சென்று, தனக்கு நேர்ந்ததைக் கூறி வருந்தினுன். பீர்பால் அவனுக்குத் தக்க ஆறுதல் கூறினுர். அரசருடைய மனத்தை மாற்றிப் பரிசில் பெற்றுத் தருவதாக அந்த வறியவனுக்கு அவர் வாக்குறுதி தந்து அனுப்பினுர்.

நாட்கள் சில கழிந்தன. ஒரு முறை அக்பரும், பீர்பாலும் வேட்டையாடும் பொருட்டுக் காட்டிற்குச் சென்றனர். காட்டில் அவர்கள் கூடாரம் அமைத்துத் தங்கியிருந்தார்கள். அப்போது பீர்பால் அக்பரை நோக்கி, "அரசர் பெருமானே! எனக்குப் பசி மிகுதியாக உள்ளது. நான் என் கைகளினுலேயே சமையல் செய்து உண்ண விரும்புகிறேன். இசைவு தாருங்கள்," என வேண்டினுர். அக்பர் அவரது வேண்டுகோளுக்கு இணங்கினுர்.

பீர்பால் கூடாரத்திற்கு வெளியே சென்ருர்; சிறிது தொலேவில் உள்ள ஓர் இடத்தில் முக்கோண வடிவில் மூன்று மூங்கில்களேக் கட்டினுர்; அதன் நுனியில் ஒரு பாத்திரத்தைக் கட்டித் தொங்க விட்டார்; அந்தப் பாத்திரத்தில் உலேயேற்றி அரிசியைப் போட்டார்; கீழே நெருப்பை மூட்டி எரிய விட்டார். இவ்வாறு பீர்பால் சமையல் வேலேயில் ஈடுபட்டார்.

காலம் கழிந்து கொண்டிருந்தது. சமையலே முடித்துக்கொண்டு பீர்பால் வருவார் வருவார் என்று பேரரசர் காத்துக் கொண்டிருந்தார். நேரம் செல்லச் செல்ல அக்பருக்குச் சினம் மேலோங்கிக்

கொண்டே இருந்தது. இறுதியில் பீர்பால் என்ன செய்கிறார் என்பதைஅறியும்பொருட்டு, அவர் தாமே கூடாரத்திலிருந்து புறப்பட்டு வந்தார். இடைவழியில் ஓரிடத்தில் பீர்பால் சமையல் செய்துகொண்டிருப்பதை அவர் கண்டார். மிக உயரத்தில் பாத்திரம் தொங்க விடப்பட்டிருப்பதையும், கீழே நெருப்பு எரிந்து கொண்டிருப்பதையும் பார்த்த அக்பர், "பீர்பால்! இது என்ன விந்தை! இவ்வாறு உயரத்தில் பாத்திரத்தைக்கட்டி, அதன்கீழ் நெருப்பை மூட்டி உன்னால் சமைக்க முடியுமா? எவ்வளவு நேரம் இப்படிச் சமைத்தாலும் உனக்கு உணவு கிடைக்காதே!" என்று கூறினார்.

அவ்வமயம் பீர்பால், "அரசர் பெருமானே! அரண்மனைச் சாளரத்தின்வழியேவரும் வெளிச்சத்திலிருந்து வெப்பத்தைப் பெற்று ஒருவன்உடலை வருத்தும் குளிர்காலத்தில் இரவு முழுவதும் யமுனை ஆற்று நீரில் நிற்க முடிந்தது என்றால், இப்போது என்னால் ஏன் எளிதாகச் சமையல் செய்ய முடியாது? அரண்மனைக்கும் யமுனைப்பெருநதிக்கும் உள்ள தொலைவை விட, பாத்திரத்திற்கும் நெருப்பிற்கும் இடையே உள்ள தொலைவு குறைவு தானே?" என்று விடையளித்தார்.

பேரரசர் அக்பர், பீர்பால் கூறிய சொற்களின் கருத்தைப் புரிந்து கொண்டார். அவர் அரண்மனைக்குச் சென்றதும், முன்பு ஆற்றில் நின்று வெற்றி பெற்ற வறியவனை அழைத்து வரச்செய்து, அவனுக்குப் பத்தாயிரம் பொன்னும் மற்றும் பல பரிசுகளும் அளித்துச் சிறப்பித்தார். அரசருடைய மன

மாற்றத்திற்குக் காரணம் நகைச்சுவைப் புலவரே என்பதனை நன்குகப் புரிந்து கொண்ட அந்த வறிய வன் அவரை நாடிச் சென்று புகழ்ந்து பாராட்டினான்.

## 6. குருடரில் பலவகை

ஒரு முறை பீர்பால் செய்த சிறிய தவறு ஒன்று அக்பருக்குப் பெருஞ் சினத்தை மூட்டிவிட்டது. அவர் விகடகவியை சினந்து கடுஞ்சொற்கள் பல கூறினார்; இறுதியில் "பீர்பால்! நீ ஒரு குருடன்" என மொழிந்தார்.

அவ்வமயம் பீர்பால் மிகவும் அமைதியுடன், "மன்னர் பெருமானே! மன்னிக்க வேண்டுகிறேன். குருடரில் பல வகையினர் உண்டு. அவர்களில் நான் எந்தப் பிரிவைச் சேர்ந்தவன் என்று அறிவிக்க வேண்டும்" எனக் கூறினார். அதனைக்கேட்ட அக்பர் பெருவியப்புற்று, "என்ன! குருடரில் பலவகை யினரா? அப்பிரிவினர்களைப் பற்றிச் சொல், கேட் போம்" என்றார்.

"அரசர் பெருமானே! கண்களின் ஒளியை இழந்து வருந்தும் இயற்கைக் குருடர் முதற்பிரிவினர் ஆவர். கண்கள் இருந்தும், அவற்றைப் பயன்படுத் தாத குருடர் பலர் இவ்வுலகில் உள்ளனர். சிலர் செல் வச் செருக்கால் குருடராகின்றனர்; வேறு சிலர் தம் முடைய கால்களினால் குருடராகின்றனர். இவ்வாறு பற்பலவகைகளில் குருடராகி விளங்குவோர் பலர் ஆவர்," என்றார் பீர்பால். அக்பர் "நீ சொல்வது உண்மையானால், இந்தப் பலவகையான குருடர்

களையும் இன்னும் ஒரு திங்களுக்குள் எனக்குக் காண்பிக்க வேண்டும்,'' என்று கட்டளை இட்டார்.

நாட்கள் சில கழிந்தன. பீர்பால் ஒருநாள் கடைத்தெருவிற்குச் சென்று, சாலை ஓரத்தில் தமது துண்டைத் தரையில் பிரித்துப் போட்டு அதன்மீது உட்கார்ந்தார்; ஒரு காகிதத்தை யெடுத்து அதில் எதனையோ எழுதிக் கொண்டிருந்தார். அவ்வழியே வந்த அரசாங்க அலுவலர்கள் பீர்பாலிடம் சென்று, "நகைச்சுவைப் புலவரே! இங்கு என்ன செய்து கொண்டிருக்கிறீர்கள்?'' என வினவினர்கள். பீர்பால் அவர்களுடைய பெயர்களை எல்லாம் குறித்துக் கொண்டார்.

மற்ருெருநாள் அவர் வறியவன் கோலத்தை மேற்கொண்டார்; அழுக்குப்படிந்து, ஆயிரம் பொத்தல்களுடன் கூடிய கந்தல் உடையை உடுத்தியிருந்தார். அந்தக் கோலத்துடன் அவர் தமக்கு மிகவும் பழக்கமான பல அரசாங்க உயர் அலுவலர்களைப் பார்க்கச் சென்ருர். பீர்பாலின் பிச்சைக்காரக் கோலத்தைக்கண்ட அவர்கள் அவரிடம் பேசவில்லை. பீர்பாலே வலியப் பேசச் சென்றபோது, அவர்கள் "நீர் யார்? உமக்கு என்ன வேண்டும்? எங்களுக்கு ஏன் தொல்லை கொடுக்கிறீர்?'' எனக் கூறி அப்பால் சென்ருர்கள். அவர்கள் பீர்பாலைத் தமக்குத் தெரிந்தவராகவே காட்டிக் கொள்ளவில்லை. பீர்பால் அவர்களுடைய பெயர்களை யெல்லாம் குறித்துக் கொண்டார்.

பின்னர் அவர் அரண்மனைக்குச் சென்று, அரசரை அணுகித் தாம் குறித்து வந்த பெயர்ப் பட்டியலை அவரிடம் கொடுத்தார். "மன்னர் பெருமானே! இந்தப் பட்டியலில் குறிப்பிடப் பட்டுள்ள அனைவரையும் இங்கு அழைத்துவரச் செய்யுங்கள். அவர்கள் எவ்வாறு குருடர்கள் ஆனார்கள் என்பதனை விளக்குகின்றேன்," எனக் கூறினார் பீர்பால்.

மன்னர் ஆணைப்படி முதலில் அரசாங்க அலுவலர் அழைக்கப்பட்டனர். அப்போது பீர்பால்; "அரசர் ஏறே! இரு நாட்களுக்கு முன்பு நான் கடை வீதியில் ஓரிடத்தில் உட்கார்ந்து எழுதிக்கொண்டிருந்தேன். அவ்வழியே வந்த இவர்கள் நான் எழுதிக்கொண்டிருப்பதைப் பார்த்த பிறகும் என்னை நோக்கி 'என்ன செய்து கொண்டிருக்கின்றீர்கள்?" என்று வினவினார்கள். எனவே, இவர்கள் கண்களைப் பெற்றிருந்தும் குருடர்கள் ஆகிவிட்டார்கள்," என்று கூறினார். பீர்பால் கூறியவற்றைக் கேட்ட அக்பர் நகைத்தார். அரசாங்க அலுவலர்கள் வெட்கமுற்றுத் தலைகுனிந்து நின்றார்கள்.

பின்னர் அரசாங்க உயர் அலுவலர்கள் அழைக்கப்பட்டார்கள். "மன்னர் பெருமானே! நான் நேற்றுப் பிச்சைக்காரனைப் போன்று வேடமணிந்து இவர்களுடைய வீடுகளுக்குச் சென்றேன். முன்பு என்னுடன் நன்றாகப் பழகி வந்த இவர்கள், எனது கோலத்தைக் கண்டு வெறுத்தார்கள். என்னை யாரென்று அறியாத அயலார் போன்று நடந்து கொண்டார்கள். செல்வச் செருக்கினால் குருடராகி

விட்டவர்கள் இவர்களே,'' என்ருர் பீர்பால். அக்பர் பின்னர் அவரை நோக்கி, "கால்களினுல் குருடராக இருப்பவர்களை இன்னும் காண்பிக்கவில்லையே?'' என்ருர். "காலம் வாய்க்கும்போது அவர்களையும் தங்களுக்குக் காட்டுகின்றேன்,'' என மொழிந்தார் நகைச்சுவைப் புலவர்.

அக்பரின் பிறந்த நாள் விழா கொண்டாடப்பெற்றது. அப்போது டில்லி மாநகரம் அழகுற அலங்கரிக்கப்பட்டது. பேரரசர் நெடுநாள் வாழ ஆலயங்களிலும், மசூதிகளிலும் வழிபாடுகள் நிகழ்த்தப் பெற்றன. நகரமாந்தர் பற்பல கேளிக்கை நிகழ்ச்சிகளில் ஈடுபட்டு இன்புற்றனர். அரண்மனையில் ஒரு பெரிய விருந்துக்கு ஏற்பாடு செய்யப்பட்டது. நகரத்தில் உள்ள பலரும், பெருவணிகர்களும் அறிஞர்களும், கலைஞர்களும், மற்றும் பலரும் அவ்விருந்தில் கலந்து கொண்டனர். நூற்றுக்கணக்கானோர் விருந்து மண்டபத்தில் அமர்ந்து விருந்துண்ணத் தொடங்கினர். சுவைமிக்க உணவு வகைகளை ஏவலர் பரிமாறிக் கொண்டிருந்தனர். அனைவரும் மகிழ்ச்சியுடன் உரையாடிக்கொண்டு விருந்துண்பதில் ஈடுபட்டிருந்தனர். அவ்வமயம் பீர்பால் அந்த மண்டபத்திற்குள் ஓடிவந்து, "அரண்மனையில் தீப்பிடித்துக் கொண்டது. எல்லோரும் ஓடுங்கள். தீ எங்கும் விரைவில் பரவுகிறது. உயிரைக் காத்துக்கொள்ள விரைந்து ஓடுங்கள்,'' என்று கத்தினர். இதைக் கேட்டதும், விருந்து உண்ண வந்திருந்த அனைவரும் பதற்றத்துடன் அரண்மனையை விட்டு வெளியேறத் தொடங்கினர். இந்தச் சந்தடியில் அவர்கள் தங்களுக்கு

உரிமையில்லாத பிறர் செருப்புகளைக் கால்களில் மாட்டிக்கொண்டு வெளியே ஓடினார்கள்.

அவர்கள் அனைவரும் வெளியே சென்று பார்த்த போது எங்கும் தீ காணப்படவில்லை. அப்போது தான் அவர்களுக்கு இது 'பீர்பாலின் குறும்புத்தனம்' எனத் தெரியவந்தது. பெருஞ்சினம் கொண்ட அவர்கள் பேரரசரிடம் சென்று, "மன்னர் பெருமானே! தங்கள் அவையின் நகைச்சுவைப் புலவர் பீர்பால் எங்களை அவமானத்திற்கு ஆளாக்கி விட்டார். நாங்கள் அனைவரும் விருந்து உண்டு கொண்டிருந்த போது, அவர் அங்கு வந்து அரண்மனையில் தீப் பிடித்து விட்டதாகப் பொய்கூறி எங்களை யெல்லாம் ஏமாற்றிவிட்டார். அவருக்குக் கடுமையான தண்டனை அளிக்க வேண்டும்," என முறையிட்டுக் கொண்டார்கள்.

அக்பர் உடனே பீர்பாலை அழைத்துவரச் செய்தார்; நகரப் பெருமக்களின் குற்றச்சாட்டுகளை அவரிடம் கூறினர். அப்போது பீர்பால், "அரசர் பெருமானே! பொய்யுரை கூறி இவர்களை ஏமாற்றியதற்காக என்னை மன்னிக்க வேண்டுகிறேன். தாங்கள் கால்களினால் குருடர்களாக இருப்பவர்களைப் பார்க்க வேண்டும் என்று கூறினீர்கள் அல்லவா? அதற்காகவே நான் இந்த முறையைக் கைக்கொண்டேன். இப்போது இவர்களுடைய கால்களைப் பாருங்கள்! ஒருவர் கால்களிலாவது அவருக்கு உரிய செருப்புகள் இருக்கின்றனவா என்று கவனியுங்கள்! அச்சத்தின் காரணமாக உள்ளம் கலங்கிய இவர்கள் தங்களுக்கு உரிமையில்லாத பிறர் செருப்

புக்கஃள மாற்றியணிந்து கொண்டிருக்கின்ருர்கள். இவர்களே கால்களினுல் குருடர்களாக இருப்ப வர்கள்!" என்று கூறினுர். அக்பர் இதைக் கேட்டு கலகல என்று சிரித்தார்; பீர்பாலின் மதி நுட்பத் தைப் பெரிதும் பாராட்டினுர்.

## 7. பெரிய கோடும் சிறிய கோடும்

மொகலாயப் பேரரசர், அறிஞர்களுடன் கூடி அளவளாவுவதில் பெருவிருப்பங்கொண்டவர். அவர் சில சமயங்களில் எவராலும் செய்ய இயலாத சில செயல்கஃளச் செய்யும்படி ஆணையிடுவார். அது போன்று எவராலும் விடை கூற இயலாத சில வினுக் கஃளக் கேட்பார். இவற்றின் மூலம் தம்மைச் சூழ்ந் திருப்போரின் நுண்ணறிவை அளந்து அறிவதே அக்பரின் நோக்கமாகும். பீர்பால் பேரரசரின் ஆணைகள் எவற்றையும் தமது மதிநுட்பத்தால் செய்து முடித்து, அவரது பேரன்பிற்கும் பெருமதிப் பிற்கும் உரியவராக விளங்கினுர்.

ஒருநாள் அக்பர், அரசவையில் அறிஞர்களும், கஃலஞர்களும், பிறரும் புடைசூழ வீற்றிருந்தார். அவர் சட்டென்று அரியணையிலிருந்து கீழே இறங்கி வந்து தரையில் ஒரு கோடு கிழித்தார்; பின்னர் அவையில் இருந்தோரை நோக்கி, "இந்தக் கோட்டை அழிக்காமலும் துடைக்காமலும் உங்க ளால் சிறிதாக்க முடியுமா?" என்று வினவினுர். அவ்வமயம் அஃனவரும் ஒன்றும் புரியாமல் விழித்துக் கொண்டிருந்தனர். அரசர் எழுதிய கோட்டை அழிக்காமலும், துடைக்காமலும் எவ்வாறு சிறிதாக்க முடியும் என்பது அவர்களுடைய சிந்தஃனக்கு எட்ட வில்ஃல.

சிறிதுநேரம் கழிந்தது. அக்பர் மீண்டும் அவை யோரை நோக்கி, "அறிஞர்களும், புலவர்களும் நிறைந்துள்ள இந்த அவையில் நான் கூறியதைச் செய்து முடிப்போர் எவருமே இல்லையா?" என்று கேட்டார். அப்போது பீர்பால் தமது இருக்கையில் இருந்து எழுந்து நின்று, "மன்னர் பெருமானே! தாங்கள் இசைவு தந்தால் நான் இதனைச் செய்து காட்டுகிறேன்," என மொழிந்தார்.

மன்னர் மனமகிழ்ந்து பீர்பாலுக்கு இசைவு தந் தார். அவையோர் அனைவரும் அவர் என்ன செய் யப் போகிறார் என்பதனை ஆவலுடன் பார்த்துக் கொண்டிருந்தனர். பீர்பால் பேரரசர் கிழித்த கோட்டுக்குப் பக்கத்தில், அதனைவிடப் பெரிய கோடு ஒன்றைக் கிழித்தார்; பின்னர் மன்னரை நோக்கி, "அரசர் பெருமானே! தாங்கள் கிழித்த கோட்டை நான் அழிக்கவும் இல்லை. துடைக் கவும் இல்லை. அது தானாகவே இப்போது சிறிதாகி விட்டது அல்லவா?" என்று கேட்டார். அக்பர், அறி வின் திறனால் தம்மை வென்ற பீர்பாலை நோக்கிப் புன்னகை புரிந்தார். அவையோர் அனைவரும் வெட் கத்தினால் தலைகுனிந்தனர்.

## 8. நகைச்சுவைப் புலவரும் இன்னிசைக் கலைஞரும்

அக்பர் கலைகளைப் பெரிதும் விரும்பும் இயல் பினர். அவரது அவையில் சிறந்த பாடகர் பலர் இருந்தனர். அவர்களுள் தலைசிறந்தவர் **தான்சேன்** என்னும் இசைவாணர் ஆவர். அவர் இனிய குரல் எழுப்பிப் பாடுவதில் வல்லவர். அவரது இன்னிசை யைக் கேட்டு மயங்காதார் எவரும் இலர். வடநாடு

முழுமையும் தான்சேனின் புகழ் பரவி யிருந்தது. அக்பர் தான்சேனைப் பெரிதும் விரும்பினர். தமது உள்ளம் பல தொல்லைகளால் சோர்வு அடையும் போது, அவர் தான்சேனை அழைத்துப் பாடச்செய் வார்; அந்த இன்னிசையில் தம்மை மறந்து ஈடுபடு வார். அக்பர் தான்சேனைப் பெரிதும் மதித்து வந்தார் எனினும், பீர்பாலுக்கு அடுத்தபடியாகத்தான் அவரை விரும்பினர்.

பீர்பால் அக்பரால் பெரிதும் மதிக்கப்படுவதைச் சிலர் விரும்பவில்லை. அவர்களுக்குப் பீர்பால்மீது பொருமை ஏற்பட்டது. அவரை எப்படியாவது தாழ்ந்த நிலைக்குத் தள்ளிவிட வேண்டும் என்று பொருமையால் உள்ளம் புழுங்கிய அவர்கள் நினைத் தார்கள். அவர்கள் ஒருநாள் அக்பரைக்கண்டு தான் சேனுக்குப் பீர்பாலைவிட உயர்ந்த பதவி கொடுக்கு மாறு கேட்டுக் கொண்டார்கள். அவர்களுடைய பொருமை உணர்ச்சியை அறிந்த அக்பர் சிரித்து விட்டு, "அன்பிற்குரியவர்களே! எனக்குத் தான்சேனிடம் மிகுந்த மதிப்பு உண்டு. அவர் ஒரு சிறந்த இன்னிசைப் பாடகர். ஆனால் அவருக்கு அரசியலைப்பற்றி ஒன்றும் தெரியாது. சிறந்த நுண் ணறிவும், மாற்றுரையும் மயக்கவல்ல நயமொழியும், குறிப்பறிந்து செயல்புரியும் திறமையும் பெற்ற பீர் பாலைக் காட்டிலும், தான்சேன் உயர்ந்தவர் என்று சொல்வது அறிவீனம்," எனக்கூறி அவர்களுடைய வேண்டுகோளுக்கு இணங்க மறுத்துவிட்டார்.

பேரரசர் இவ்வாறு கூறிய பின்னரும், பொரு மைக்காரர்கள் தங்களுடைய முயற்சியை விட்டார்

அல்லர். அவர்கள் வாய்ப்பு நேரும்போதெல்லாம் தம் முடைய விருப்பத்தை மன்னரிடம் எடுத்துரைத்து வந்தனர். அக்பர் அவர்களுக்குத் தான்சேனைக் காட் டிலும் பீர்பால் உயர்ந்தவர் என்பதை எவ்வாறு விளக்குவது என்று சிந்தித்து ஒருமுடிவிற்கு வந்தார். உடனே அவர் சாவகநாட்டு அரசருக்கு இருகடிதங் கள் எழுதினார்; ஒவ்வொரு கடிதத்திலும் "இக் கடிதம் கொண்டுவருபவர்களைக் கொன்று விடுக," என எழுதி யிருந்தார்; அவற்றுள் ஒன்றைப் பீர்பா லிடமும், மற்றொன்றைத் தான்சேனிடமும் தந்தார்; அக்கடிதங்களைச் சாவகநாட்டு மன்னரிடம் கொடுக் கும்படி கூறி அவ்விருவரையும் அனுப்பிவைத்தார். அக்கடிதங்களில் எழுதப்பட்டிருக்கும் செய்தி இன்னது என்பது அவ்விருவருக்கும் தெரியாது.

தான்சேனும், பீர்பாலும் மன்னரின் ஆணையை மேற்கொண்டு சாவக நாட்டை அடைந்தனர். மொகலாயப் பேரரசின் தூதுவர்களாக வந்துள்ள அவர்களைச் சாவகநாட்டு மன்னர் சிறப்பாக வர வேற்று உபசரித்தார். அவ்விருவரும் மன்னரிடம் தங்கள் பேரரசர் தந்த கடிதங்களைக் கொடுத்தனர். அக்கடிதங்களைப் படித்துப் பார்த்ததும் சாவகமன் னருக்குச் சந்தேகம் தோன்றியது. "அக்பர் இவர் களைக் கொன்றுவிட விரும்புவது எதனால்? இவர்களை எதற்காக இங்கு அனுப்பிக் கொல்லவேண்டும்?" என்ற சிந்தனை அவருடைய உள்ளத்தில் இடம் பெற்றது. அவர் தம்முடைய அமைச்சர்களுடன் இதனைப்பற்றிக் கலந்து பேசினார். இறுதியில் ஒரு முடிவிற்கு வந்த அம்மன்னர், தான்சேனையும் பீர் பாலையும் நோக்கி, "உங்கள் இருவரையும் உடனே

கொன்றுவிடும்படி உங்கள் பேரரசர் எனக்கு எழுதிய கடிதத்தில் குறிப்பிட்டிருக்கின்ருர். உங்கள்மீது அவருக்கு ஏன் இத்துணை வெறுப்பு என்பதை நான் அறியேன். ஆனுல் நான் உங்களை இப்போதே கொல்லப் போவதில்லை. இன்னும் பதினைந்து நாட்கள் சிறையில் இருங்கள். பிறகு நீங்கள் ஏதாவது சொல்ல விரும்பினுல் சொல்லுங்கள். அதன்பின்னரே உங்கள் தண்டனை நிறைவேற்றப்படும்,'' எனக்கூறி அவர்களைச் சிறையில் அடைத்தார்.

சிறையில் தான்சேன் பெரிதும் கலங்கினுர். அவர் பேரரசர் தமக்கு இழைத்த அநீதியை எண்ணி யெண்ணி உள்ளம் புழுங்கினுர்; தமது குடும்பத்தாரின் வருங்கால நிலையை நினைத்துக் கண்ணீர் வடித்தார். அவர் பீர்பாலை நோக்கி, "நண்பரே! பேரரசர் அக்பர் நம்மை ஏமாற்றி விட்டார். எவருக்கும் ஒரு தீங்கும் செய்யாத நமக்கு ஏன் இந்தக் கொடுந்தண்டனை விதித்தார்? உற்ருரையும் உறவினரையும் பிரிந்து, பெற்ற தாய்நாட்டையும் துறந்து, வேற்று நாட்டு மண்ணில் நம்மைக் கொல்வதற்கா வேந்தர் பெருமான் விரும்பினுர்?'' எனப் புலம்பினுர்.

"தான்சேன் எதற்கும் கவலைப்படாதீர்கள்! விதியை மதியால் வென்றவர்களைப்பற்றி உங்களுக்குத் தெரியாதா? சாவைக்கண்டு கலங்குவது கோழைத்தனம். நான் சொல்கிறபடியே செய்யுங்கள். 'ஆறிலும் சாவு நூறிலும் சாவு' என்பது

தாங்கள் அறியாதது அல்லவே! என்னுடைய திட்டப் பயன் அளித்தால் நாம் இருவரும் உயிர் தப்பிப் பிழைக்கலாம்,'' என்று கூறினர் பீர்பால்.

"பீர்பால்! உங்களைத்தான் நம்பி இருக்கிறேன். உங்கள் அறிவுத்திறனில் எனக்கு ஆழ்ந்த நம்பிக்கையுண்டு. நீங்கள் சொல்லும் வழியிலேயே நடப்பேன். ஒருவேளை எனக்குக் கொலைத்தண்டனை விதிக்கப்பட்டு நீங்கள் மட்டும் தப்பிச் சென்ருல், எனது குடும்பத்தாரைக் காப்பாற்றும் பொறுப்பை மேற்கொள்ளுங்கள்,'' என்று கண்ணீர் விட்டவாறே கூறினர் தான்சேன்.

அப்போது பீர்பால், "தான்சேன்! என்னை நம்புங்கள். உங்களுக்கு எத்துன்பமும் வாராதபடி நான் காப்பாற்றுகின்றேன். நான் சொல்லும் முறையில் நீங்கள் நடந்துகொண்டால் போதும். மன்னர் குறிப்பிட்டுக் கூறிய காலக்கெடுவு முடிந்ததும், நம்மை அரசவைக்குக் கூட்டிச் செல்வார்கள். அப்போது நான் 'எனக்குத்தான் முதலில் கொலைத்தண்டனை விதிக்கவேண்டும்' என்று கூறுவேன். நீங்களும் அவ்வாறே 'எனக்குத்தான் முதலில் கொலைத் தண்டனை விதிக்கவேண்டும்' எனக் கூறவேண்டும். அதன்பிறகு நடக்கவேண்டியதை நான் கவனித்துக் கொள்ளுகிறேன்,'' என்ருர்.

தான்சேன் பீர்பாலின் சொற்களில் நம்பிக்கை கொண்டு ஆறுதல் அடைந்தார். பதினைந்து நாட்களைப் பீர்பாலும் தான்சேனும் சிறையில் கழித்தனர். பதினரும் நாள் காலையில் அவ்விருவரும் சாவகமன்

னரது அவைக்கு அழைத்துச் செல்லப்பட்டனர். மன்னர் அவர்களை நோக்கி, "உங்களுடைய விருப்பம் யாதெனத் தெரிவிக்கலாம்" என்றார். அப்போது பீர்பால் மன்னரை வணங்கி, "அரசர் பெருமானே! நாங்கள் இருவரும் இறக்கவே விரும்புகின்றோம். ஆனால் தாங்கள் எனக்கு முதலில் கொலைத் தண்டனை விதிக்க வேண்டும். அதுதான் என்னுடைய ஆவல்," என்றார். அவ்வமயம் தான்சேன் பீர்பாலைத் தள்ளிக்கொண்டு முன்வந்து, "மன்னர் பெருமானே! தாங்கள் எனக்குத் தான் முதலில் கொலைத்தண்டனை விதிக்க வேண்டும். என்னுடைய இறுதி விருப்பத்தை நிறைவேற்றக் கட்டளை இடுங்கள்," என்றார்.

"இல்லை, இல்லை. அவர் பேச்சைக் கேட்காதீர்கள். தாங்கள் முதலில் என்னுடைய இறுதி விருப்பத்தை நிறைவேற்றுங்கள்," என்றார் பீர்பால். "அவரை நம்பாதீர்கள், அவர் உங்களை ஏமாற்ற நினைக்கிறார்! எனக்கு முதலில் கொலைத்தண்டனை தாருங்கள்," என இடைமறித்துக் கூறினார் தான்சேன்.

இவ்வாறு இருவரும் போட்டிபோட்டுக்கொண்டு இறக்க முன்வருவது சாவக மன்னருக்கு வியப்பை அளித்தது. அவர் "எவரும் இந்த உலகில் உயிரோடு வாழத்தான் விரும்புவார்கள். நீங்கள் இருவரும் இறப்பதற்குப் போட்டியிடுகின்றீர்களே! அப்படி என்ன இனிமை இந்தச் சாவில் இருக்கின்றது?" என வினவினார்.

“அரசர் பெருமானே! தாங்கள் கூறியதுபோல் இந்தச் சாவில் இனிமை இருக்கின்றது. வருங்கால நல் வாழ்விற்கு இது வழிகாட்டுகின்றது. இதில் ஒரு பெரிய உண்மை மறைந்து கிடக்கின்றது. அந்த உண்மையை எவருக்கும் கூறக்கூடாது என்பது எங்கள் வேந்தர் பெருமானின் கண்டிப்பான கட்டளை. தாங்கள் வற்புறுத்திக் கேட்பதால் சொல்லுகின்றேன். எங்கள் மன்னருக்கு இந்த நாட்டை வென்று, தம்முடைய ஆட்சிக்கு அடங்கச் செய்ய வேண்டும் என்பது நெடுநாளைய விருப்பம். ஆனால் இந்திய நாட்டிலிருந்து பெரும்படையைத் திரட்டிக் கொண்டு வந்து, தங்களை வென்று அடிமைப்படுத்துவது கடினமான செயல் என்பதை அவர் நன்றாக அறிவார். எனவே அவர் சோதிடர் ஒருவரிடம் தங்கள் நாட்டை வெல்லும் முறை யாதென வினவினர். அப்போது அந்தச் சோதிடர், “மன்னரே! நமது நாட்டுக் குடிமக்களுள் தங்களுடைய அன்பிற்கு உரியவர்களாக விளங்கும் இருவர் சாவக நாட்டிற்குச் சென்று அந்நாட்டு மன்னரால் கொல்லப்படுவராயின், அவ்விருவருள் முதலில் இறப்பவன் மறுபிறவியில் அந்நாட்டு மன்னனுகப் பிறப்பான். இரண்டாவதாக இறப்பவன் அமைச்சனுகப் பிறப்பான்!” என்று கூறினர். இவ்வாறு சோதிடர் கூறியதை நம்பிய எங்கள் பேரரசர் எங்களை இங்கு அனுப்பியுள்ளார். நாங்கள் தங்களால் கொல்லப் பட்டால், மறுபிறவியில் இந்நாட்டு அரசராகவும் அமைச்சராகவும் ஆகிவிடுவோம். அப்போது எங்களிடமிருந்து இந்த நாட்டை எளிதில் வாங்கித்

தமது பேரரசுடன் இணைத்துவிடலாம் என்பதே பேரரசர் அக்பரின் நோக்கமாகும்,'' என்றார் பீர்பால்.

இதைக்கேட்டதும் சாவக மன்னருக்குக் கடுஞ் சினம் உண்டாயிற்று. அவர் பீர்பாலையும், தான் சேனையும் பார்த்து, "அக்பர் என்னை ஏமாற்ற அல்லவா நினைத்துவிட்டார். எங்கள் சாவகநாடு எவருக்கும் என்றும் அடிமையாகாது. நான் உங்கள் பேரரசருக்குக் கப்பம்கட்டி அடங்கி வாழும் சிற்றரசன் அல்லன். எனக்கு ஆணையிட அவருக்கு என்ன உரிமை இருக்கிறது? அவர் கட்டளையை நிறைவேற்ற முடியாது. என் முன்னிலையில் நில்லாதீர்கள்; உடனே இந்த நாட்டைவிட்டு ஓடுங்கள்; சாவக நாட்டு எல்லைக்கு அப்பாற் செல்லுங்கள்,'' எனச் சீறி விழுந்தார்.

பீர்பாலும் தான்சேனும் தங்கள் உயிர் தப்பியதற்காகப் பெரிதும் மகிழ்ந்து, சாவக நாட்டிலிருந்து புறப்பட்டு டில்லி வந்து சேர்ந்தனர். தான்சேன் பீர்பாலைத் தழுவிக்கொண்டு, உயிர்காத்த உத்தமர் என்று பாராட்டினார். அவ்விருவம் பேரரசர் அக்பரைக்கண்டு நிகழ்ந்தவை அனைத்தையும் கூறினர். அப்போது அக்பர் மிக்க மகிழ்ச்சியடைந்து, அவ்விருவருக்கும் நிறைய பரிசில்கள் அளித்து அனுப்பினார். பின்னர் பீர்பால்மீது பொறாமை கொண்டவர்களை அழைத்துவரச்செய்து, "பீர்பாலைக் காட்டிலும் தான் சேனுக்குப் பெரும்பதவி தரவேண்டும் என்று பிடிவாதம் செய்தீர்களே? பீர்பாலின் திறமையினால்தான்

நமது அரசவைப் பாடகர் தான்சேனின் தலைதப்பி யது என்பதை இப்போதாவது அறிந்து கொள்ளுங் கள். இனியாவது அவ்விருவரையும் ஒப்பிட்டுப் பேசாதீர்கள்!'' என்று அறிவுரை கூறி அனுப்பினர்.

## 9. பீர்பால் வழங்கிய தீர்ப்பு

பேரரசர் அக்பர் சில சிக்கலான வழக்குகளை ஆராய்ந்து நீதி வழங்கும்போது பீர்பாலின் அறிவுத் திறனைச் சோதிப்பது வழக்கம். ஒரு முறை அக்பர் தமது அரசவையில் வீற்றிருந்தபோது, குடிமக்கள் இருவர் தமது வழக்கைக் கூற முன் வந்தனர். அவர் களில் ஒருவன், "அரசர் பெருமானே! நான் இந்த நகரக் கடைத்தெருவில் கசாப்புக்கடை வைத்திருக் கிறேன். ஒரு நாள் இவரது எண்ணெய்க் கடைக்குச் சென்றுஎண்ணெய்வாங்கிக்கொண்டு திரும்பினேன். சிறிது நேரத்திற்குப் பின்னர் நான் கடைவீதியில் சென்று கொண்டிருந்தபோது, இந்த மனிதர் ஓடி வந்து, என் கையில் இருந்த பணப்பையைப் பிடுங் கிக்கொண்டு என்னைப் பலவாறு தூற்றினர்; திரு டன் என்று பழித்துரைத்தார். இந்தப் பணப்பை என்னைச் சார்ந்தது. நான் கள்வன் அல்லன். எனக்கு நீதி வழங்க வேண்டுகிறேன்,'' என்று முறையிட்டான்.

"மன்னர் பெருமானே! நம்பாதீர்கள், இந்த நய வஞ்சகனை! இவன் கூறுவது பொய்யுரை. அந்த ஏமாற்றுக்காரன் என்னை ஏய்த்துவிட்டான். நான் என் கடைமீது அமர்ந்து கணக்கு எழுதிக்கொண் டிருந்தேன். அப்போது இந்தக் கசாப்புக்காரன்

அங்கு வந்து எண்ணெய் வேண்டும் என்று கேட்டான். நான் எண்ணெயை அளந்து ஊற்றிக்கொண்டிருந்தபோது என்னுடைய பணப்பையைக் களவாடி விட்டான். இவன் கடையை விட்டுச் சென்ற பின்னர், பணப்பையைத் தேடிய நான் அதனைக் காணுது திடுக்கிட்டேன்; இவனைத் தேடிக்கொண்டு கடைத்தெருவின் வழியே ஓடினேன்; கையும் களவுமாக இந்தக்கயவனைப் பிடித்துவிட்டேன். பணப்பை என்னைச் சேர்ந்தது. அதனை என்னிடம் தாருங்கள். இந்தக் கள்வனுக்குக் கடுந்தண்டனை விதியுங்கள்," என வேண்டிக் கொண்டான் மற்ருெருவன்.

பேரரசர் அக்பர் இந்தவழக்கில் தீர்ப்புவழங்கும் பொறுப்பைப் பீர்பாலிடம் ஒப்படைத்தார். பீர்பால் சிறிது நேரம் சிந்தித்துப் பின்னர் வழக்கு உரைக்க வந்த இருவரிடமும், "உங்கள் பணப்பையை என்னிடம் கொடுத்துவிட்டுச் செல்லுங்கள்; நாளைவாருங்கள். நல்ல தீர்ப்பு வழங்குகின்றேன்," எனக் கூறினுர். அவர்கள் அவ்வாறே பணப்பையைப் பீர்பாலிடம் கொடுத்துவிட்டுச் சென்ருர்கள். பீர்பால் அந்தப் பையைத் தம்முடைய வீட்டிற்கு எடுத்துக் கொண்டு சென்ருர்.

மறுநாள் அரசவை கூடியது. மாந்தர் பலர் பீர்பால் தீர்ப்பு வழங்கும் முறையைக் கவனிக்கப்பெரிதும் ஆவலுடன் கூடியிருந்தனர். எண்ணெய் வணிகனும் கசாப்புக்கடைக்காரனும் அழைக்கப்பட்டனர். அப்போது பீர்பால் அவ்விருவருள் கசாப்புக்காரனை முதலில் அழைத்து; "இந்தப் பணப்பை இறைவன்

மீது ஆணையாக என்னைச் சேர்ந்தது என்று உறுதி மொழிகூறுவாயானால், இதனை உனக்குத்தந்துவிடுகி றேன்,'' என்றார். கசாப்புக்காரன் பீர்பால் கூறிய வாறே உறுதிமொழி யளித்தான். பின்னர் எண் ணெய்க் கடைக்காரனும் அவ்வாறே, "பணப்பை பரம்பொருளின்மீது ஆணையாக எனக்கு உரிமையு டையது'' என உறுதிமொழி கூறினான். ஆயினும் பீர் பால் கசாப்புக்காரனிடமே பணப்பையைக் கொடுத் தார். அப்போது எண்ணெய் வணிகன், "இது அநீதி! நேர்மைக்கு மாறான முடிவு! பீர்பால் நடு நிலைமை தவறித் தீர்ப்பு வழங்கிவிட்டார்,'' எனக்கத் தினான். அக்பருக்கும், அவையோருக்கும், பீர்பாலின் தீர்ப்பில் நம்பிக்கை தோன்றவில்லை. நேர்மையான முறையில் வழக்கு ஆராயப்படவில்லை என்றே அனைவரும் கருதினர்.

அப்போது அக்பர் பீர்பாலை நோக்கி, "பீர்பால்! பணப்பைக்கு உரியவன் கசாப்புக்காரன் என்பதை நீ எப்படி கண்டுபிடித்தாய்!'' என வினவினார். நகைச்சுவைப் புலவர், "பேரரசர் பெருந்தகையே! இந்த ஐயம் தங்களுக்கு மட்டுமன்று. இந்த அவையி லுள்ளோர் அனைவருக்கும் தோன்றியுள்ளது என் பதை நான் நன்றாக அறிவேன். அகத்தின் அழகு முகத்தில் தெரியுமல்லவா? நான் குற்றவாளியை எப் படிக் கண்டறிந்தேன் என்பதை இப்போது விளக்கு கின்றேன்; நேற்று இவர்கள் கொடுத்த பணப்பையை என் வீட்டிற்குக் கொண்டு சென்றேன்; அப்பையில் இருந்த பணத்தையெல்லாம் கொட்டிவிட்டுப் பையைக் காலிசெய்து, தண்ணீரில் ஊறவைத்தேன்; பிறகு நன்றாகச் சுத்தம் செய்து உலர வைத்துப்

பணத்தை மீண்டும் அதனுட் போட்டுக் கட்டி வைத்தேன்; பணப்பையைக் கழுவிய தண்ணீரை உற்றுக் கவனித்தேன். அத்தண்ணீர் சிறிது செந்நிற மாக மாறியிருந்தது. மேலும் அந்த நீரில் இரத்தத் தின் மணம் சிறிதளவு பரவியிருந்தது. இதிலிருந்து இந்தப்பணப்பைகசாப்புக்கடைக்காரனைச் சார்ந்தது என்பதையும், எண்ணெய் வணிகன்தான் ஏமாற்றுக் காரன் என்பதையும் கண்டறிந்தேன்'' எனக் கூறினார்.

அவையோர் பீர்பாலின் நுண்ணறிவைப் பெரி தும் பாராட்டினர். அக்பர் பிறர் உடைமையைத் தன்னுடைய உடமையாக்கிக் கொள்ள முயன்ற வனுக்குக் கடுந்தண்டனை விதித்தார்.

## 10. விண்ணுலகம் கண்ட பீர்பால்

நகைச்சுவைப் புலவரின் புகழ் நாள்தோறும் வளர்ந்து கொண்டே சென்றது. அழுக்காறு கொண்டவர்களால் அவர் பெருமையை அழிக்க முடியவில்லை. பீர்பால் பேரரசர் அக்பரிடம் பெற்றி ருக்கும் செல்வாக்கைக் குறைக்கப் பொருமைக்காரர் கள் பெருமுயற்சி செய்தார்கள். ஆனால் அவர்களு டைய திட்டத்திற்கு வெற்றி கிடைக்கவில்லை. இறுதி யில் பீர்பாலை ஒழித்துவிட்டால்தான் தங்களுக்கு நிம்மதி கிடைக்கும் என்று எண்ணிய அவர்கள், அக்கொடுஞ் செயல்களை நிறைவேற்றுதற்குரிய வழி வகைகளை ஆராய்ந்து ஒரு முடிவிற்கு வந்தார்கள்.

மொகலாயப் பேரரசருக்கு முடியலங்கரிக்கும் கலையில் வல்ல முதியவன் ஒருவனைப் பீர்பாலின்

பகைவர்கள் தாங்கள் விரித்த சூழ்ச்சியாகிய வலையில் சிக்க வைத்தார்கள். அம்முதியவன் நெடுங்காலமாக அரண்மனையில் வாழும் அரச குடும்பத்தினருக்கு முடியலங்கரிக்கும் தொழிலில் ஈடுபட்டு வருபவன். அக்பர் சிறுவராக இருந்தபோதும் அம்முதிய வனே அவருக்கு முடியலங்கரிக்கும் தொழிலை மேற் கொண்டிருந்தான். அவன் உலகச் செய்திகளைப் பற்றிச் சுவைபடச் சொல்லிக் கொண்டே பேரரச ருக்கு முடியலங்கரிப்பதிலும், முகத்தை அழகுபடுத்து வதிலும் ஈடுபடுவான். அக்பருக்கு அவனிடம் மிகுந்த அன்பு உண்டு. பீர்பாலின் பகைவர்கள் அவனது உதவியைக்கொண்டு தங்கள் திட்டத்தை நிறை வேற்றிக்கொள்ள முயன்றனர். முதலில் அவன் அவர்களுடைய சூழ்ச்சிக்கு இணங்க மறுத்தான். அவர்கள் அவனுக்குப் பெரும்பொருள் தருவதாக ஆசை காட்டித் தங்கள் வழிக்குக் கொண்டு வந்தார் கள்.

ஒரு நாள் காலையில் பேரரசருக்கு முகம் மழிக் கும் தொழிலில் அம்முதியவன் ஈடுபட்டிருந்தான். அவன் பேரரசரின் முன்னோர்கள் சிறப்புற வாழ்ந்த பெருமையைச் சுவைபடக் கூறிக்கொண்டே தன் தொழிலில் ஈடுபட்டிருந்தான். அக்பர் அவன் கூறிய வற்றை விருப்புடன் கேட்டுக்கொண்டிருந்தார். முன் னோர்களின் வரலாற்றைக் கூறிவந்த முடியலங்கரிப் போன், "மன்னர் பெருமானே! அஞ்சாத நெஞ்சத் துடன் அயல்நாடான இந்தியாவிற்கு வந்து, பெரியதோர் ஆட்சியை நிறுவிப் பெருமைப்பட வாழ்ந்த தங்கள் பாட்டனாரான பாபரின் சிறப்பை

யாரால் கூறமுடியும்! சீரும் சிறப்புமாகச் செங்கோல் செலுத்திய தங்கள் தந்தையார் மட்டும் தாழ்ந்தவரா? மண்ணுலகில் மதிப்புடன் வாழ்ந்த அவர்கள் விண்ணுலகில் எவ்வாறு இருக்கின்றார்களோ?'' என்றான்.

அதனைக் கேட்ட பேரரசர் வியப்புடன், "கண்களுக்கும் கருத்துக்கும் எட்டாத மேலுலகத்தில் நிகழும் செய்திகளை நாம் எப்படி அறியமுடியும்?'' என்றார். அப்போது முடியலங்கரிப்போன், "அரசர் பெருமானே! முயன்றால் முடியாததும் உண்டோ! தங்களுடைய மதிப்பிற்கும் பேரன்பிற்கும் உரியவரும், சிறந்த அறிவுநுட்பம் அமையப் பெற்றவரும் ஆகிய பீர்பால் நினைத்தால் எதனையும் செய்து முடிப்பார். வேண்டுமானால் அவரைக் கேட்டுப்பாருங்கள். அவர் தங்களின் தூதுவராக விண்ணுலகம் சென்று, தங்கள் முன்னோர்களின் நிலையை அறிந்துவருவார்,'' என்று கூறினான்.

பேரரசர் அக்பருக்கு முடியலங்கரிப்போனின் கெடுமதி புலனாயிற்று. பீர்பாலின் மாற்றார்கள் செய்யும் சூழ்ச்சி இது என்பதனைப் புரிந்துகொண்ட அவர், தமது உள்ளக் கருத்தை வெளிக்காட்டிக் கொள்ளாதவராய், எதனையும் அறியாதவர் போன்று நடித்து, "உன்னுடைய ஆலோசனையை நாமும் ஆதரிக்கின்றோம். பீர்பாலை விரைவில் விண்ணுலகிற்கு அனுப்பிவைப்போம்,'' என்றார். முடியலங்கரிப்போன் தனது சூழ்ச்சி பயன் அளித்து விட்டது என்று மகிழ்ச்சியடைந்து, "வேந்தர் பெருமானே! விண்ணுலகத்தை விரைவில் அடைவதற்கு எளிய வழியொன்று உண்டு. பீர்பால் தூய உடையணிந்து

நகரை வலம்வந்து சுடுகாட்டை அடையவேண்டும். அங்கு ஓர் ஈமப்படுக்கை அமைக்கப் படவேண்டும். அதன்மீது பீர்பால் அமரவேண்டும். அப்போது மறையொலி முழங்கவேண்டும். பீர்பாலைச் சுற்றிலும் விறகுகளை அடுக்கித் தீ மூட்டவேண்டும். கொழுந்துவிட்டு எரிகின்ற செழுந்தீ பீர்பாலை விண்ணுலகிற்கு விரைவில் கொண்டு சேர்க்கும். அங்கு அவர் தமது அலுவல்களை முடித்துக்கொண்டு நலமாக வருவார்,'' எனக் கூறினான்.

அக்பர் அவனது கருத்தை ஏற்றுக்கொள்பவர் போன்று நடித்தார். அவர் பீர்பாலின் அறிவுத்திறன், இந்தக் கடுமையான சோதனையில் எந்த அளவுக்குப் பயன் அளிக்கிறது என்பதனை அறிந்துகொள்ள முடிவு செய்தார். எனவே, அவர் பீர்பாலை அழைத்து வரச்செய்தார். அவரிடம் விண்ணுலகத்திற்குச் சென்று, தமது முன்னோர்களின் நிலையை அறிந்து வருமாறு ஆணையிட்டார். பேரரசரின் ஆணை பீர்பாலுக்குப் பெருவியப்பை அளித்தது. அவர், "அரசர் பெருமானே! தீயில் புகுந்து உயிரைவிட்டவர் மீளவும் திரும்பி வருதல் இயலுமோ?'' என்றார். "பீர்பால்! அதைப் பற்றியெல்லாம் எனக்குத் தெரியாது. எனது முன்னோர்களின் நிலையை நான் கட்டாயம் தெரிந்து கொள்ளவேண்டும். உன்னைத் தவிர என் நம்பிக்கைக்கு உரியவர் வேறு எவரும் இலர். நீதான் மேலுலகம் சென்று திரும்பவேண்டும்,'' என்றார் பேரரசர் அக்பர்.

பீர்பால் சிறிது நேரம் சிந்தித்தார். மன்னர் பெருமான் தமது மதிநுட்பத்தினை அளந்து அறிய

விரும்புகிருர் என்பதனைப் புரிந்துகொண்ட நகைச் சுவைப் புலவர், "அரசர் ஏறே! தங்கள் ஆணைப் படி நடக்கக் காத்திருக்கின்றேன். ஆனல் எனக்கு இரண்டு திங்கள் தவணை தாருங்கள். எனது மேலுல கப் பயணத்திற்கு உரிய ஏற்பாடுகளைச் செய்து முடித்து விட்டு வருகிறேன்," என்ருர். அக்பர் அவரது வேண்டுகோளுக்கு இசைந்தார்.

பீர்பால் பேரரசரிடம் விடைபெற்றுக் கொண்டு இல்லத்திற்குத் திரும்பினர். அவர் தம்முடைய வீட்டிற்கும், இடுகாட்டில் தாம் எரிக்கப்பட இருக்கும் இடத்திற்கும் இடையில் பூமிக்குக் கீழே சுருங்கை வழியொன்றைத் தமது நம்பிக்கைக்கு உரிய வேலையாட்களைக் கொண்டு அமைக்கச் செய்தார்; அப் பாதையின் முடிவில் பிறர் கண்களுக்குப் புலப்படாத வாறு, சிறிய கதவு ஒன்றை அமைக்கச் செய்தார். இவ்வாறு பீர்பால் அமைத்த சுருங்கை வழியைப் பற்றி அவரது குடும்பத்தினருக்கும், வேலையாட்களுக்கும் நீங்கலாக வேறு எவருக்கும் தெரியாது.

இரண்டு மாதங்கள் கழிந்தன. பீர்பால் மன்னரைக் கண்டு அவரது ஆணைப்படி விண்ணுலகத்திற்குச் சென்று வருவதாக விளம்பினர். அவரது மேலுலகப் பயணத்திற்கு நன்னுள் ஒன்று குறிக்கப் பட்டது. அந்நாளில் நகரமாந்தர் பலர் இடுகாட்டில் குழுமியிருந்தனர். "பாவம்! பீர்பாலுக்கா இந்த முடிவு!" என வருந்தினர் சிலர். "பேரரசருக்குப் பித்துப் பிடித்து விட்டதோ!" எனக் கலங்கினர் வேறு சிலர். "நயமொழியாலே நல்லுரை கூறும் நகைச் சுவைப் புலவரை நாம் இனி என்று காண்போம்!"

என்று ஏங்கினர் மற்றும் சிலர். "அரசரின் ஆணை மிகக் கொடுமையானது! இந்த அநீதி அடுக்காது!" எனப் பொருமினர் பலர். இவ்வாறு அனைவரும் வருந்தும் இந்த நேரத்தில் பீர்பாலின் பகைவர் மட்டுமே பெருமகிழ்ச்சி கொண்டனர்.

பீர்பால் பெருந்திரளான மக்கள் தம்மைப் பின் தொடர நகரை வலம் வந்து இடுகாட்டை அடைந்தார்; அங்கு அழகுற அலங்கரிக்கப்பட்டிருந்த மேடையின்மீது ஏறி ஈமப்படுக்கையில் அமர்ந்தார். அவரைச் சூழ்ந்து விறகுகள் அடுக்கப்பட்டன. சங்கு முழங்கிற்று. மறையொலி எழுந்தது. ஈமத்திற்குத் தீவைக்கப்பட்டது. இதற்கிடையில், விறகுகள் தமது உடம்பை மறைத்ததும், பீர்பால் ஈமப் படுக்கையிலிருந்து நழுவித் தாம் அமைத்திருந்த சுருங்கை வழியாகச் சென்று தமது இல்லத்தை அடைந்தார்.

மக்கள் மூண்டு எரியும் செந்தீயில் மாண்டு மடிந்துவிட்டார் பீர்பால் என்று எண்ணி மனம் புழுங்கினர்கள். பேரரசர் அக்பருக்குக்கூட, பீர்பாலின் சூழ்ச்சி புரியவில்லை. "பீர்பால் ஈமப் படுக்கையில் ஏறி அமர்வதற்குள், தமது சூழ்ச்சியால் எவ்வாறுயினும் தப்பி விடுவார்," என எதிர்பார்த்திருந்த பேரரசருக்கு மிகுந்த வருத்தம் ஏற்பட்டது. 'விளையாட்டு வினையாய் முடிந்து விட்டதே' என்று அவர் வருந்தினர்.

மறைவு வழியில் சென்று தமது வீட்டை அடைந்த பீர்பால், இரண்டு திங்கள் வரை இல்லத்தை விட்டு வெளியே வரவில்லை. அவர் தமது முகத்திலும், தலையிலும் மயிர் மிகுதியாக வளரும்

வரை காத்திருந்தார். அவரது முகத்தைத் தாடி மறைத்தது. அதன் பின்னர் அவர் புதிய ஆடைகளை அணிந்து கொண்டு அரண்மனைக்குச் சென்றார். தாடியும் மீசையுமாகப் பீர்பாலைக்கண்ட மாந்தர் சிலர் பேரச்சம் உற்றனர். ஆண்டாண்டு தோறும் அழுது புரண்டாலும் மாண்டார் திரும்பிவராத மாநிலத்தில் பீர்பால் உயிருடன் வந்ததுபலருக்குப் பெருவியப்பை அளித்தது. அவர் அரசவையை அணுகியபோது, அவையோர் அனைவரும், பீர்பாலைக் கண்டு பெருந் திகில் உற்றனர்; "இறந்தவரின் ஆவி இவ்வுருவில் வந்ததோ!" என அச்சமுற்றனர். அப்போது பீர்பால், "அரசர் பெருமானே! அவையோர்களே! நான்தான் பீர்பால். என்னைக்கண்டு அச்சமோ, வியப்போ அடையத் தேவையில்லை. விண்ணுலகத் திலிருந்து இப்போதுதான் வருகின்றேன்," எனக் கூறினார்.

அவையோர் அனைவர் உள்ளத்திலும் வியப்புக் குடிகொண்டது. பேரரசர் அக்பர் "எனது முன்னோர் களைக் கண்டாயா பீர்பால்? என்து தந்தையார் எப் படி இருக்கின்றார்? எனது பாட்டனார் நலமா?" என வினவினார். "அரசர் பெருமானே! தங்கள் முன்னோர் கள் அனைவரையும் பார்த்தேன். அவர்களுக்கு எந்தக் குறையும் இல்லை. நன்றாக உண்டு, நல்ல உடைகளை உடுத்தி மகிழ்ச்சியுடன் வாழ்கிறார்கள். ஆனால்...?" என்று அரைகுறையாக நிறுத்தினார் பீர்பால். பேரரசர் மிக்க ஆர்வத்துடன், "பீர்பால்! ஆனால் என்று தயங்குவது ஏன்? அவர்களுக்கு வேறு என்ன குறை அங்குக் காணப்படுகிறது?" என்றார்.

"வேந்தே!, தங்கள் முன்னேர்களுக்கு விண்ணுலகில் ஒரே ஒரு குறை உண்டு. முடியலங்கரிப்போர் அங்கு இல்லை. ஆகையால் அவர்கள் தொல்லைப்படுகிருர்கள் ; முடி திருத்திக்கொள்ளவும். முகத்தை மழித்து அழகுபடுத்திக் கொள்ளவும் வழியின்றித் தவிக்கிருர்கள். அவர்கள் ஒவ்வொருவரும் பெரிய தாடியை வளர்த்துக்கொண்டிருக்கிருர்கள்," என்ருர் நகைச்சுவைப் புலவர்.

.அதனைக்கேட்ட பேரரசர், "அப்படியானுல் முடியலங்கரிக்கும் தொழிலில் வல்லவன் ஒருவனை நாம் மிக விரைவில் மேலுலகத்திற்கு அனுப்பி வைப்போம்," என மொழிந்தார். "மன்னர் பெருமானே! தங்களுடைய முடியலங்கரிப்போனின் தொழில் திறமையைத் தங்கள் தந்தையாரும் பாட்டனுரும் மிகுதியும் போற்றுகின்ருர்கள். அவனை உடனே அனுப்பி வைத்தால் மிகுதியும் நலமாக இருக்கும்," என்ருர் பீர்பால்.

பேரரசர் பீர்பாலின் கருத்தை ஏற்றுக்கொண்டு முடியலங்கரிப்போனை அழைத்து வரச் செய்து, மேலுலகத்திற்குச் செல்லுமாறு ஆணையிட்டார். அரசரது கட்டளையைக்கேட்ட அம்முதியவன் உள்ளம் கலங்கினுன். தனது சூழ்ச்சித் திட்டம் தன் உயிருக்கே உலைவைத்திருப்பதை நினைத்து வருந்திய அவன், அக்பரின் பாதங்களில் விழுந்து தன்னை மன்னிக்குமாறு வேண்டினுன். தன்னைத் தூண்டிவிட்ட தீயவர்களின் திட்டத்தை அவன் அம்பலப்படுத்தினுன். அக்பர் அழுக்காறு கொண்ட அக்கொடியவர்களுக்குக் கொடுந்தண்டனை விதித்தார்.

அதன் பின்னர் பீர்பால் தாம் உயிர் தப்பிப் பிழைப் பதற்கு மேற்கொண்ட தந்திரச் செயலைப்பற்றிப் பேரரசருக்கும், அவையோருக்கும் எடுத்துரைத்தார். அனைவரும் அருஞ்செயலைப் புரிந்த அவரைப் பெரிதும் போற்றினர்.

இவ்வாறு மொகலாயப் பேரரசில் நகைச் சுவைப் புலவராய் விளங்கிய பீர்பால் தமது நுண்ணறிவால் சாதித்த அருஞ்செயல்களை விளக்கும் கதைகள் பல உள்ளன.

## 2. அமைச்சர் அப்பாஜி

வட இந்தியாவில் மொகலாயப் பேரரசு மேன்மையுற்று விளங்கிய நாளில், தென் இந்தியாவில் விசயநகரப் பேரரசு தலைசிறந்து விளங்கியது. விசய நகரத்து வேந்தர்கள் தங்கள் வலிமையினால் தென்னாடு முழுவதையும் வென்று ஆண்டு வந்தார்கள். அவர்களிடம் யானைப்படை, குதிரைப்படை, காலாட் படை என்னும் மூவகைப் படைகளும் இருந்து வந்தன. அப்பேரரசர்களில் தலைசிறந்தவர் **கிருட்டிண தேவ ராயர்** ஆவர்.

இராயர், வீரம்மிக்கவர்; அஞ்சாமையும் அரசியல் அறிவும் வாய்க்கப் பெற்றவர்; கலைகள் பல பயின்றவர்; ஆற்றல் நிறைந்தவர்; சிறந்த கவிஞர்; புலவர்களை ஆதரிக்கும் புரவலர்; கடவுட்பற்று அமையப் பெற்றவர். இவரது அவையில் எட்டுப் பெரும் புலவர் சிறப்புடன் விளங்கினர். அவர்களுள் ஒருவரே **தெனாலி ராமன்** என்பவர். அவர் இராயரது அவையில் நகைச்சுவைப் புலவராக இருந்தார். அவரைப் பற்றி வழங்கும் கதைகள் பலவற்றை நீங்கள் அறிந்திருப்பீர்கள்.

விசயநகர வேந்தரான இராயர், தமது பேரரசுக்கு அடங்காமல் இருந்த சிற்றரசர்களை அடக்கினார்; தமக்குப் பெரும்பகைவராக விளங்கிய மன்னர்களை நடுங்கச் செய்தார். இவரது பெருவெற்றிகளுக்கும், நேர்மை தவறாத ஆட்சிமுறைக்கும் காரணமாக விளங்கியவர் **அப்பாஜி** என்னும் அமைச்சர் ஆவர். அவர் தமது நுண்ணறிவின் திறனால்

இராயரது பேரன்பிற்கு உரியவராகி அமைச்சர் பதவியை ஏற்ருர். அப்பாஜி தமது அறிவு நுட்பத்தினுல் செய்து முடித்த அருஞ்செயல்கள் பலவாகும். நம் நாட்டில் அவரைப் பற்றிச் சுவைமிக்க கதைகள் பல வழங்கி வருகின்றன. அவற்றுள் சிலவற்றை இங்குக் காண்போம்.

## 1. அப்பாஜி அமைச்சர் ஆனுர்.

விசயநகரப் பேரரசுக்கு அடங்கிய சிற்றரசர் பலர் இருந்தனர். அவர்களுக்கு **நாயக்க மன்னர்கள்** என்பது பெயர். அவர்கள் விசயநகர வேந்தரின் ஆணையை நிறைவேற்றும் பொறுப்பு வாய்ந்தவர்கள். அப்பாஜி நாயக்க மன்னர் ஒருவரின் அமைச்சராக இருந்துவந்தார். ஒருமுறை கிருட்டிண தேவ ராயர் குறுநில மன்னர் அனைவரையும் தமது அரண்மனைக்கு வருமாறு அழைத்தார். பேரரசர் ஆணைப்படி சிற்றரசர் அனைவரும் தலைநகரில் கூடினர். ஆனுல் அப்பாஜியின் அரசர் மட்டும் வரவில்லை. அவர் தமக்குப் பதிலாகத் தமது அமைச்சரான அப்பாஜியை அனுப்பியிருந்தார்.

அரசவை கூடியது. இராயர் அரியணையில் அமர்ந்திருந்தார். குறுநில மன்னர் ஒவ்வொருவராகப் பேரரசரைக் கண்டு வணக்கம் செலுத்தி இருக்கைகளில் அமர்ந்தனர். இறுதியில் அமைச்சர் அப்பாஜி வந்து வணங்கி நின்ருர். வேந்தர் அவரை நோக்கி, "நீர் யார்? எங்கே உமது மன்னர்?" என வினவினுர். அப்போது அப்பாஜி, "வேந்தர் பெருமானே! எமது அரசர் சில தவிர்க்க முடியாத கார

ணங்களால் தங்கள் பேரவைக்கு வர முடியவில்லை. நான் அவரது அமைச்சன். என்னை அப்பாஜி என்று அழைப்பார்கள்,'' என மொழிந்தார்.

அப்போது இராயருக்குச் சிறிது சினம் தோன்றியது. அரசர் தாமே நேரில் வராமல், தமது அமைச்சரை அனுப்பியிருப்பது அவருக்கு ஆத்திரத்தை உண்டாக்கியது. எனினும் பேரரசர் தமது சினத்தை வெளிக்காட்டிக் கொள்ளவில்லை. அவர் "உமது மன்னரை விரைவில் இங்கு வரவழையும்,'' என்று அப்பாஜிக்கு ஆணையிட்டார். அமைச்சர் தமது மன்னருக்கு வேந்தரின் வெகுளியை வெளிப்படுத்தி ஒரு கடிதம் வரைந்தார். அக்கடிதத்தில் அவர், தமது மன்னரை உடனே புறப்பட்டு வந்து, விசயநகரத்திற்கு அப்பால் எங்கேனும் ஓர் இடத்தில் தங்கியிருக்குமாறு குறிப்பிட்டிருந்தார். இராயரின் சீற்றம் தணிந்ததும், தமது மன்னர் அவரைக்காண ஏற்பாடு செய்தல் நலம் என்று அப்பாஜி நினைத்தார்; அதனுல் தான் தம் மன்னருக்கு அவ்வாறு கடிதம் எழுதினுர். அமைச்சரின் கடிதத்தைக் கண்ட குறுநில மன்னர் உடனே புறப்பட்டு வந்து, விசய நகர எல்லைக்கு அப்பால் ஓரிடத்தில் தங்கியிருந்தார்.

நாட்கள் சில கழிந்தன. அப்பாஜி இராயருடன் நெருங்கிப் பழகி வந்தார். அவர் தமது மதிநுட்பத்தால் மன்னரின் உள்ளத்தைக் கவர்ந்தார்; தமது பேச்சு வன்மையால் அனைவரையும் தம் வசப்படுத்தினுர். ஒருநாள் இராயர் அப்பாஜியை உடன் அழைத்துக்கொண்டு நகர்வலம் வந்தார். அப்போது கடைத்தெருவில் உள்ள கசாப்புக் கடையொன்றில்

ஒருவன் ஆடு ஒன்றைத் தலைகீழாகக் கட்டித்தொங்க விட்டு, அதன் தோலை உரித்துக் கொண்டிருந்தான். இந்தக் காட்சியை விசயநகர வேந்தர் விருப்புடன் நோக்கினர். அவர் சட்டென்று அப்பாஜியின் பக்கம் திரும்பி, "உமது அரசர் ஏன் இன்னும் வரவில்லை? விரைவில் அவரை வரவழையும்," எனக் கட்டளை யிட்டார்.

இராயரது மனநிலையை அப்பாஜி புரிந்து கொண்டார்; தமது மன்னருக்குக் கடுந்தண்டனை விதிக்கப் பேரரசர் நினைக்கிறார் என்பதை அறிந்து கொண்டார். அவர் உடனே தமது அரசருக்கு ஒரு கடிதத்தை வரைந்தார். அக்கடிதத்தில் அவரை உடனே ஊருக்குத் திரும்பிச் சென்று விடும்படி எழுதியிருந்தார். அதன்படி அச்சிற்றரசர் தம் ஊருக்குச் சென்று விட்டார்.

நாட்கள் பல கழிந்தன. ஒரு நாள் இராயரும், அப்பாஜியும் மகிழ்ச்சியுடன் உரையாடிக்கொண்டிருந்தனர். அப்போது இராயர் அப்பாஜியை நோக்கி, "அமைச்சரே! உமது மன்னரை உடனே வரவழைக்கும்படி நாம் உமக்கு ஆணையிட்டிருந்தும், இந்நாள் வரையில் அவர் நம்மைக் காண வாராதது ஏன்?" எனக் கேட்டார். அப்போது அமைச்சர், "மன்னர் பெருமானே! தாங்கள் எனது மன்னர் மீது சினங் கொள்வதில்லையென்று உறுதிமொழி தந்தால், நான் உண்மையைக் கூறுகின்றேன்," என்றார். இராயர் அவ்வாறே உறுதிமொழி யளித்தார்.

"வேந்தர் பெருமானே! தாங்கள் அன்று அரசவையில் எனக்கு ஆணையிட்டதும், நான் எமது

மன்னருக்கு உடனே புறப்பட்டு வந்து விசயநகர எல்லைக்கு அப்பால் தங்கியிருக்கும்படி கடிதம் எழுதினேன். அவரும் உடனே புறப்பட்டு வந்தார். அப்போது தாங்கள் மிகுந்த சினத்துடன் இருந்ததால், தங்கள் சீற்றம் தணிந்த பிறகு எமது மன்னரைத் தங்கள் திருமுன்பு அழைத்து வரலாம் என்று நான் கருதினேன். பின்னர் ஒரு நாள் நகர்வலம் சென்றபோது, கடைவீதியில் கசாப்புக் கடைக்காரன் ஒருவன் ஆட்டைத் தலைகீழாகத் தொங்கவிட்டுத் தோலை உரிப்பதைத் தாங்கள் ஆவலுடன் பார்த்தீர்கள்; உடனே என்னைப்பார்த்து, "உமது மன்னர் ஏன் இன்னும் வரவில்லை?" என வினவினீர்கள். அதிலிருந்து எமது அரசருக்குக் கடுமையான தண்டனை விதிக்க வேண்டுமென்று தாங்கள் நினைப்பதை நான் புரிந்துகொண்டேன். இந்நிலையில் எமது மன்னர் தங்களைக்காண வருவது தவறு என எண்ணிய நான், அவரை உடனே ஊருக்குத் திரும்பும்படி வேண்டிக்கொண்டேன். அவரும் அவ்வாறே சென்று விட்டார்.

பேரரசர் பெருந்தகையே! தாங்கள் இப்போது சினந் தணிந்து அமைதியோடு இருக்கின்றீர்கள். எனவேதான் இந்த உண்மையைக் கூறுகின்றேன். ஒரு குற்றமும் செய்யாத எமது மன்னரையும், "என்னையும் மன்னிக்க வேண்டுகிறேன்," என்று கூறினார் அப்பாஜி.

இராயர் அப்பாஜியின் அறிவுத்திறனை வியந்து பாராட்டினார். குறிப்பறிந்து தொழில் புரியும் அப்பாஜியிடம் விசயநகர வேந்தருக்குப் பெருவிருப்பம் உண்

டாயிற்று. அவர் மிகுந்த மகிழ்ச்சியுடன் "அப்பாஜி! உமது நாட்டுப் பற்றையும், நீர் உமது அரசர்பால் கொண்டுள்ள அன்பையும் பாராட்டுகின்றேன். நீர் ஒரு குறுநில மன்னரிடத்தில் அமைச்சராக இருக்க வேண்டியவர் அல்லர். விசயநகரப் பேரரசு பகைவர்களை முறியடித்துப் பார் முழுவதும் புகழ்பெற்று விளங்குவதற்கு உம்மைப்போன்ற அறிஞர்களின் துணையை நாடி நிற்கின்றது. இன்று முதல் உம்மை எமது முதலமைச்சராக அமர்த்துகின்றேன்," எனக் கூறினர்.

அப்போது அப்பாஜி அகமும் முகமும் மலர, "வேந்தரே! தங்கள் விருப்பம்போல் இப்பணியை ஏற்கின்றேன். உடலில் உயிர் உள்ளவரை இந்த விசயநகரப் பேரரசின் மேன்மைக்காகப் பாடுபடுவேன். நாடு செழிக்க என்னுடைய நல்லறிவைப் பயன்படுத்துவேன். வாழ்க தங்கள் புகழ்! வாழ்க இந்த வளமிக்க நாடு!" என்று கூறினர்.

அன்று முதல் அறிவுத்திறன் வாய்ந்த அப்பாஜி விசயநகரப் பேரரசரின் உற்ற துணைவராகவும், சிறந்த அமைச்சராகவும் அமைந்து நாட்டின் முன்னேற்றத்தையே பெரிதெனக் கருதிப் பணிகள் பல புரிந்து வந்தார்.

## 2. குழிக்கிணறும், குடப்பூசணியும்

அமைச்சர் அப்பாஜியின் அறிவு நுட்பத்தினல் விசயநகரப் பேரரசின் புகழ் எங்கும் பரவியது. விசயநகர வேந்தருக்கு வெற்றிமேல் வெற்றி கிடைத்தது. பகைவர் பணிந்தனர். மக்கள் இராய

ரையும், அமைச்சரையும் பாராட்டினார்கள். அப்பாஜி யின் பெருமை வடநாட்டில் பரவியது. அந் நாளில் டில்லியை ஆண்டுவந்த பேரரசர், அப்பாஜி யின் அறிவுத்திறனைச் சோதிக்க விரும்பினார். எனவே அவர் இராயருக்கு ஒரு கடிதத்தை அனுப்பி வைத் தார். அக்கடிதத்தில், "விசய நகர வேந்தருக்கு, டில்லிப் பேரரசர் வரைந்தது. தாங்கள் எம்முடன் கொண்டிருக்கும் நட்பிற்கு அறிகுறியாகத் தங்கள் நாட்டிலிருந்து குழிக்கிணறும் குடப்பூசணியும் நடைக்கீரையும் அனுப்பிவைக்கவும்," என எழுதப் பட்டிருந்தது.

இராயர் கடிதத்தைப் படித்தார். அவருக்கு ஒன் றும் விளங்கவில்லை. அருகில் இருந்த அமைச்சரைப் பார்த்து, "அமைச்சரே! டில்லிவேந்தர் கேட்டிருக் கும் விந்தைப் பொருட்களை எங்கிருந்து பெறுவது?" எனக் கேட்டார். அப்போது அப்பாஜி, "அரசர் பெருமானே! தங்களுக்கு எந்தக் கவலையும் வேண்டா. டில்லி வேந்தர் விரும்பிய பொருள்களை விரைவில் அனுப்பி வைப்போம். எல்லாவற்றையும் நானே கவனித்துக் கொள்கிறேன்," எனக் கூறி னார். இராயர் தமது அமைச்சரின் சொற்களை நம்பி ஆறுதல் அடைந்தார்.

அப்பாஜி தமது ஏவலரை அழைத்துப் பிஞ்சு டன் கூடிய பூசணிக் கொடியொன்றைக் கொண்டு வரச் செய்தார்; அக்கொடியை ஒரு குடத்தில் இட் டுக் காய்க்கச் செய்தார்; அதன் பின்னர் மொட்டை வண்டியொன்றை கொண்டுவரச் செய்தார். அமைச் சர் அந்த வண்டியின் மேல் மண்ணைப் பரப்பிப்

பாத்தி கட்டினர்; அந்தப் பாத்தியில் கீரைவிதைகளைத் தெளித்தார்; இவ்வாறு நடைக்கீரையை உண்டாக்கினர்.

பின்னர் அவர் டில்லி வேந்தருக்கு ஒரு கடிதம் வரைந்தார். அக்கடிதத்தில், "தாங்கள் விரும்பிய குடப் பூசணியையும், நடைக் கீரையையும் அனுப்பியுள்ளோம். எங்கள் நாட்டுக் குழிக்கிணறுகள் டில்லி மக்களுக்குப் புதியனவாக இருக்கும். ஆகையால் அங்கு உள்ள குழிக்கிணறுகளில் ஒன்றை மாதிரிக்காக அனுப்பி வைத்தால், நாங்கள் அதைப் போன்ற குழிக்கிணறு ஒன்றை விரைவில் அனுப்பி வைக்கிறேம்," எனக் குறிப்பிட்டிருந்தார்.

அதன் பின்னர் அமைச்சர் இராயரைக் கண்டு அவரிடம் கடிதத்தையும், மற்றைய பொருட்களையும் ஒப்படைத்து டில்லிக்கு அனுப்பி வைக்குமாறு வேண்டிக் கொண்டார். இராயர் தமது அமைச்சரின் அறிவுத் திறனையறிந்து மிக்க மகிழ்வுடன், அவற்றை டில்லி வேந்தருக்கு அனுப்பிவைத்தார். தாம் விரும்பிய பொருட்களைக் கண்ட டில்லி மன்னர் அப்பாஜியின் நுண்ணறிவை எண்ணி வியந்தார்.

## 3. உயர்ந்தோரும் தாழ்ந்தோரும்

டில்லிப் பேரரசர் மீண்டும் ஒரு முறை அப்பாஜியின் அறிவைச் சோதிக்க விரும்பினர். அவர் ஒரே அமைப்புடன் விளங்கும் மூன்று வெண்கலச் சிலைகளைச் செய்வித்தார். அவை மனித உருவில் அமைந்தவை. அவற்றை அவர் விசய நகர வேந்தருக்கு அனுப்பி வைத்தார். அச்சிலைகளுடன் ஒரு

கடிதத்தையும் அனுப்பியிருந்தார். அக்கடிதத்தில், "தங்கள் நட்பின் அறிகுறியாகத் தாங்கள் அனுப்பி வைத்த குழிக்கிணறும் நடைக்கீரையும் கிடைத்தன. தங்களுக்கு மனித உருவில் அமைந்த மூன்று வெண் கலச் சிலைகளை அனுப்பி வைத்துள்ளோம். அவற் றுள் உயர்ந்த மனிதரைக் குறிக்கும் சிலை எது என் பதையும், இடைப் பட்டவர், தாழ்ந்தவர் ஆகியோ ரைக் குறிக்கும் சிலைகள் எவை என்பதையும் கண்டு பிடித்து அறிவிக்க வேண்டுகிறேம்," என்று குறிப் பிட்டிருந்தார்.

இராயர் டில்லி வேந்தர் அனுப்பிய சிலைகளையும் கடிதத்தையும் கண்டார். அவற்றின் குண நலன் களை ஆராய்ந்து கூறும்படி தமது அவையினரைக் கேட்டுக் கொண்டார். மூன்று சிலைகளும் ஒன்றிற் கொன்று வேறுபாடு காண முடியாதவாறு ஒன்று போலவே இருந்தன. எனவே அவையோர் அச்சிலை களிடையே உயர்வு தாழ்வுகளைக் கண்டு பிடிக்க முடியாமல் சோர்ந்து நின்றனர். அமைச்சர் அப் பாஜி அந்த மூன்று சிலைகளையும் உற்று நோக்கினர். அச்சிலைகளின் செவிகளில் சிறு துளைகள் இருப்பதை அவர் அறிந்தார்.

அமைச்சர், மெல்லிய கம்பியொன்றை எடுத்து ஒரு சிலையின் செவியில் உள்ள துளையில் நுழைத் தார். அப்போது அந்தச் சிறிய கம்பி வாயின் வழி யாக வெளியே வந்தது. பிறகு மற்றொரு சிலையின் அருகிற் சென்று, அக்கம்பியை அதனுடைய செவித் துளையில் நுழைத்தார். அக் கம்பி மற்றொரு செவியின் வழியாக வெளியே வந்தது. அதன் பின்னர்

அப்பாஜி மூன்றாவது சிலையின் காது வழியாகக் கம்பியைச் செருகினர். அக்கம்பி எதன் வழியாக வும் வெளியே வரவில்லை. அது உள்ளேயே தங்கி விட்டது.

அமைச்சர் பின்னர் இராயரை நோக்கி, "மன்னர் பெருமானே! செவி வழியாகக் கேட்ட செய்தியை வாய் வழியாக வெளிப் படுத்துபவன் மக்களுள் தாழ்ந்தவன் ஆவான். ஒரு செய்தியை ஒரு காதினுல் வாங்கி, மற்ருெரு காதின் வழியாக விட்டு விடுபவன் இடைப்பட்டவன் ஆவான். தான் கேட்டறிந்த செய்தியை எந்த வழியாகவும் வெளி யிடாதபடி உள்ளத்திலேயே அடக்கி வைத்திருப்ப வனே உயர்ந்தவன். இச்செய்தியை முறையே மூன்று சிலைகளின் கீழேயும் எழுதி அனுப்பி விடுங் கள்,'' என்று கூறினர்.

அரசரும், அவையோரும் அமைச்சரைப் பெரி தும் பாராட்டினர். விளக்கம் எழுதப்பட்ட சிலைகள் மூன்றும் டில்லிக்கு அனுப்பப்பட்டன. டில்லிப் பேரரசர் அவற்றைக் கண்டு பெருவியப்புக் கொண் டனர். தென்னுட்டு அமைச்சரின் தெளிந்த அறிவுத் திறனை வடநாட்டார் அனைவரும் போற்றிப் புகழ்ந் தனர்.

## 4. போலி அரசரைப் புரிந்து கொண்ட அமைச்சர்

டில்லி வேந்தரும், அவரது அவையில் உள்ள அறிஞர்களும், அப்பாஜியை நேரில் கண்டு அவரு டன் அளவளாவ விரும்பினர். டில்லிப் பேரரசர், அமைச்சர் அப்பாஜியைத் தமது விருந்தினராக

அனுப்பி வைக்கும்படி விசயநகர வேந்தருக்கு வேண்டுகோள் விடுத்தார். தமது அமைச்சருக்கு வடநாட்டில் கிடைக்க இருக்கும் வரவேற்பை நினைத்து இராயர் மனமகிழ்ந்தார். எனவே அவர் அப்பாஜியை டில்லிக்கு அனுப்பிவைத்தார்.

அமைச்சர் அப்பாஜி விசய நகரத்திலிருந்து புறப்பட்டுச் சென்று டில்லியை அடைந்தார். அவரை அரசாங்க உயர் அலுவலர்களும், டில்லி மாநகரில் வாழும் மக்களும் மிக்க மகிழ்ச்சியுடன் வரவேற்ருர்கள். அப்பாஜி பயணத்திஞல் நேர்ந்த சோர்வு காரணமாக விருந்தினர் மாளிகையில் சிறிது நேரம் தங்கியிருந்து ஓய்வு எடுத்துக் கொண்டார்; அதன் பின்னர் அரசரைக் காணும் பொருட்டு அரச வையை நோக்கி வந்து கொண்டிருந்தார்.

இதற்கிடையில் டில்லி வேந்தருக்கு அப்பாஜி யின் மதிநுட்பத்தைத் தாமே நேரில் சோதித்து அறிய வேண்டும் என்னும் அவா ஏற்பட்டது. தென் ஞட்டு அமைச்சர் தமது அரசவையை நோக்கி வந்து கொண்டிருக்கிருர் என்பதனை அறிந்த பேரர சர் அரியணையிலிருந்து கீழே இறங்கிஞர்; அமைச் சர் வேடம் பூண்டு மற்றைய அமைச்சர்களுடன் ஒருவராகத் தாமும் அமர்ந்து கொண்டார்.

அவர் தமது காவலர்களில் ஒருவனை அழைத்து அவனுக்கு அரசருக்கு உரிய உடுப்புக்களை அணி வித்தார்; அவனை அரியணையில் அமரச் செய்தார். மன்னரின் செயலைக் கண்ட மற்றையோர் திகைப் படைந்து, பின்னர் நடக்க இருப்பதை, ஆவலுடன் எதிர் நோக்கிக் கொண்டிருந்தனர்.

அமைச்சர் அப்பாஜி அரசவையினுள் நுழைந்தார்; ஒரு முறை அவையின் அமைப்பை நோக்கினர். எதனையும் கூர்ந்து நோக்கி அறியும் அப்பாஜியின் கண்களுக்கு அரியணையில் அமர்ந்திருப்பவர் போலி அரசர் என்பது புலப்படாமற் போகவில்லை. அவர் அமைச்சர்கள் அமர்ந்திருந்த இடத்தை நோக்கிச் சென்ருர்; அமைச்சர்களுள் ஒருவராக வீற்றிருந்த வேந்தர் பெருமானைக் கண்டு வணங்கி நின்ருர்.

அப்பாஜியின் செயலைக் கண்டு அவையோர் அனைவரும் மெய்ம்மறந்தனர். பேரரசருக்குப் பெரு வியப்பு உண்டாயிற்று. அவர், “அமைச்சரே! நீர் எம்மை எவ்வாறு கண்டுபிடித்தீர்?” என வினவினர். அப்போது அப்பாஜி, “அரசர் பெருமானே! நான் தங்களைக் கண்டு பிடித்தது வியப்பிற்கு உரிய செய்கை அல்ல. சிந்திக்கும் திறமை படைத்தவர்களுக்கு இது மிகவும் எளிய செயலே யாகும். நான் அரசவைக்குள் நுழைந்ததும், ஒரு முறை சுற்று முற்றும் பார்த்தேன். அப்போது அவையோர் அனைவருடைய கண்களும் தங்களையே ஆவலுடன் பார்த்துக் கொண்டிருந்தன. அரியணையில் அமர்ந்திருந்த போலி அரசரை எவரும் கவனிக்கவில்லை. இதிலிருந்து தாங்களே அரசர் பெருமான் என்பதனை அறிந்து கொண்டேன்,” என்று கூறினர்.

டில்லி மன்னர் அவரது அறிவுத்திறனைப் பாராட்டிப் புகழ்ந்தார்; அவருக்குப் பல புரிசில்களை வழங்கினர். அப்பாஜி சில நாட்கள் டில்லியில் பேரரசருடன் தங்கியிருந்து, அளவளாவி மகிழ்ந்தார். பின்

னர் அவரிடம் விடைபெற்றுக் கொண்டு விசயநக ரத்திற்குப் புறப்பட்டார்.

வடநாடு சென்று, தென்னுட்டாரின் அறிவுத் திறனை விளக்கி வெற்றியுடன் திரும்பிய அப்பாஜியை விசயநகர மாந்தர் பெருமகிழ்வுடன் வரவேற்றனர். அமைச்சர் இராயரைக் கண்டு வணங்கி, டில்லியில் நடந்த செய்திகளை எடுத்துரைத் தார். இராயர் அதனைக்கேட்டு அகமகிழ்ந்தார்.

## 5. வேந்தரை உதைத்த கால்களுக்குத் தண்டனை

அமைச்சர் அப்பாஜி அரசியல் நிர்வாகத்தில் மிகவும் கண்டிப்பானவர்; நேர்மையைக் கடைப் பிடிப்பவர். நேர்மைக்கும் நீதிக்கும் புறம்பான செயல்களை அவர் ஒருபோதும் செய்யார். அரசியாரின் நெருங்கிய உறவினர் சிலர், அரசாங் கத்தில் சில சலுகைகளைப் பெற முயன்றனர். ஆனுல் அப்பாஜி நேர்மைக்குப் புறம்பான அச்செயல்களுக் குச் சிறிதும் இடங்கொடுக்கவில்லை. அதனுல் அப்பாஜி மீது பொருமை கொண்ட அவர்கள் எவ்வாருயினும் அவரை அமைச்சர் பதவியிலிருந்து நீக்கிவிடவேண்டும் என்று பெருமுயற்சி செய்தார் கள். இராயரின் மனத்தை மாற்றுவதற்கு, அரசியா ரின் ஆதரவைத் தேடினுர்கள். அவர்கள் அரசி யாரிடம் அமைச்சர் அப்பாஜியைப்பற்றிப் பல பொய்யுரைகளைக் கூறினுர்கள். அதனுல் அந்த அம்மையாருக்கு அமைச்சர் மீது வெறுப்பு ஏற் பட்டது.

அரசியார் அப்பாஜிக்குப் பதிலாக முதலமைச்சர் பதவியை ஏற்றுச் செம்மையாக அரசியல் காரியங்

களைக் கவனிக்க அறிஞர் ஒருவரைக் கண்டு பிடித்தார். அவர் பல நூல்களைக் கற்றறிந்தவர் ; சாத்திரங்கள் பலவற்றைக் கரைத்துக் குடித்தவர் ; ஆயினும் நுண்ணறிவு அமையப் பெருதவர். அவரை விசய நகரப் பேரரசின் முதலமைச்சராக அமர்த்தவேண்டும் என்று இராயரிடம் அவரது மனைவியார் மன்றுடினர். ஆனல் இராயர் அரசியாரின் வேண்டுகோளுக்கு எளிதில் இணங்கவில்லை. மன்னரை மனைவியார் மேன்மேலும் வற்புறுத்தவே, அவர் " அப்பாஜியைக் காட்டிலும் இந்த அறிஞர் சிறந்தவரா என்பதனை ஆராய்ந்து பார்ப்போம். அதன் பின்னரே உனது வேண்டுகோள் நிறைவேற்றப்படும்,'' என்று கூறினர். அரசியார் தமது பேரரசர் நடத்த இருக்கும் அறிவுத்தேர்வில் வெற்றி பெறுவார் என்று எண்ணிக் களிப்புடன் இருந்தார்.

சில நாட்கள் சென்றன. ஒரு நாள் அரசவையில் அரசியாரால் பரிவுரை கூறப்பட்ட அறிஞர் உட்பட அனைவரும் கூடியிருந்தனர். அவ்வமயம் இராயர், " அவையோர்களே! நேற்று இரவு நான் எனது அந்தப்புரத்தில் அமர்ந்திருந்தபோது, ஒருவன் என் மார்பில் காலால் எட்டி உதைத்தான் ; தன் கைகளால் கன்னத்தில் அறைந்தான் ; மேலும் எனது முகத்தில் எச்சிலை உமிழ்ந்தான். அவனுக்கு என்ன தண்டனை கொடுக்கலாம் என்று நீங்கள் கருதுகின்றீர்கள்,'' என வினவினர்.

அவையோர் அனைவரும் வேந்தரின் வினவிற்கு என்ன மறுமொழி கூறுவது என்று சிந்தித்துக்கொண்டிருந்தனர். அவ்வமயம் அமைச்சர் பதவியை

ஆவலுடன் எதிர்பார்த்துக் கொண்டிருக்கும் அறிஞர் தமது இருக்கையினின்றும் எழுந்து நின்ருர்; பேரரசரை வணங்கினுர்; "மன்னர் மன்னரே! தங்கள் திருமார்பில் எட்டி உதைத்த தீயவனை எளிதில் விட்டுவிடுவதா? கூடாது! கூடாது! அந்தக் கொடியவனின் கால்களை வெட்டி எறியவேண்டும். தங்கள் கன்னத்தில் அறைந்த அந்தக் கயவனின் கைகளைத் துண்டிக்கவேண்டும். எழில் ததும்பும் தங்கள் இனிய முகத்தில் எச்சிலை உமிழ்ந்தவனைச் சும்மா விடக்கூடாது. அம்மா என்று அலறி அழும்படி அடித்து வருத்தவேண்டும். இதுவே எனது கருத்து," என மொழிந்தார்.

வேந்தர் புன்னகை புரிந்து அப்புதியவரை ஏளனம் தோன்ற நோக்கினுர்; பின்னர் அப்பாஜியைப் பார்த்து 'அமைச்சரே! உமது கருத்து யாது?' என்று வினவினுர்.

அப்பாஜி பணிவுடன் எழுந்து நின்று வேந்தரை வணங்கி, "மன்னர் பெருமானே! தங்களை எட்டி உதைத்தவனின் எழில்மிகுந்த கால்களுக்குப் பொற்சதங்கை பூட்டிப் பூரிப்பு அடையவேண்டும். தங்கள் கன்னத்தில் அறைந்த அவன் கைகளைத் தாங்கள் கண்மலரில் ஒற்றிக்கொள்ளவேண்டும். தங்கள் முகத்தில் எச்சிலை உமிழ்ந்த வாயை முத்தமிட்டு மகிழவேண்டும். பேரரசராகிய தங்கள் அந்தப்புரத்தில் இரவு நேரத்தில் தடையின்றி வரக்கூடியவர் தங்கள் செல்வப் புதல்வரைத் தவிர வேறு யாராக இருக்க முடியும்? பகைவரை எதிர்த்து, அவர்களுடைய படைக் கலங்களைத் தாங்கிக்கொள்ளும் தங்கள் பரந்த

மார்பில் எட்டி உதைக்கவும், தங்கள்மீது எச்சிலை உமிழவும் மழலை மொழி பேசும் எங்கள் இளவரசரைத் தவிர வேறு யாரால் முடியும்?" எனக் கூறினர்.

இராயர், அப்பாஜி கூறியது உண்மைதான் என்பதற்கு அறிகுறியாகத் தலையை அசைத்துப் புன்னகை புரிந்தார். அமைச்சர் பதவியை நாடி வந்த புதியவர் நாணி நின்ருர். அரசியாரின் உள்ளத்திற்கு இந்தத் தேர்வு அமைதி அளிக்கவில்லை. அவர் தமது பெருமதிப்பிற்கு உரிய அறிஞரை மீண்டும் ஒரு சிறந்த தேர்வில் ஈடுபடச் செய்தால், அவர் வெற்றி பெறுவது திண்ணம் என்று இராயரிடம் எடுத்துரைத்தார். மன்னரும் அவ்வாறே செய்வதாக வாக்களித்தார்.

## 6. அறிவுடையார் எல்லாம் உடையார்

அறிவுச் செல்வம் அமையப் பெற்றவர்கள் இவ்வுலகில் எவ்விதத் துன்பமும் இன்றி இனிமையாக வாழ்வார்கள். "அறிவுடையார் எல்லாம் உடையார் அறிவிலார்-என்னுடைய ரேனும் இலர்" என்பது திருக்குறள். இதன் கருத்து "அறிவைப் பெற்றவர், தம்முடைய அறிவின் ஆற்றலால் தமக்கு வேண்டிய யாவற்றையும் பெறுவர். அறிவிலாதார் தாம் பெற்றுள்ள சிறப்புக்கள் யாவற்றையும் இழந்து விடுவர்" என்பதாகும். இத்தகைய சிறந்த அறிவுச் செல்வத்தைத் தமது உடைமையாகக் கொண்டுள்ள அப்பாஜி ஏற்ற காலமும் இடமும் அறிந்து, எதனையும் கூறும் பேச்சுத் திறமையால் விசயநகரப் பேரரசுக்கு நேர இருந்த இடையூறுகள் பலவற்றை நீக்கினர்.

ஒரு முறை இராயர் சிறிது சாம்பலும், சிறிது மயிரும் எடுத்து ஒன்ருகக் கலந்தார்; அக்கலவையை இரு கூருகப் பிரித்து இரண்டு பொட்டலங்களாகக் கட்டினுர்; அதன் பின்னர் அப்பாஜியையும், அமைச்சர் பதவியை அடைய விரும்பும் அறிஞரை யும் அழைத்து வரச் செய்தார். முதலில் ஒரு பொட்ட லத்தை அப்பாஜியிடம் கொடுத்து இதைக்கொண்டு சென்று கலிங்கநாட்டு மன்னரிடம் கொடுத்துவிட்டு வாரும்'' எனக் கட்டளையிட்டார். பின்னர் அரசியா ரால் பரிவுரை செய்யப்பட்ட அறிஞரை அழைத்து அவரிடம், "நீர் கன்னட நாட்டிற்குச் சென்று இதனை அந்நாட்டு மன்னரிடம் கொடுத்து வரவேண்டும்,'' எனக் கூறி மற்ருெரு பொட்டலத்தை அவரிடம் தந்தார்.

இருவரும் பேரரசரிடம் விடைபெற்றுப் பிரிந்து சென்றனர். அறிஞர் கன்னட நாட்டிற்குச் சென்ருர். அந்நாட்டு மன்னரைக் கண்டு உரையாடினுர்; இரா யர் கொடுத்த பொட்டலத்தைக் கன்னட நாட்டின் காவலரிடம் கொடுத்தார். விசயநகரப் பேரரசர் தமக்கு அனுப்பியுள்ள அன்பளிப்பு யாதாக இருக்கும் என்ற ஆவலுடன் கன்னட நாட்டு மன்னர் பொட் டலத்தைப் பிரித்தார்; அதனுள் சாம்பலும் மயிரும் இருப்பதைக் கண்டு திடுக்கிட்டார். "இது என்ன? மயிரும் சாம்பலுமாக இருக்கின்றதே! உங்கள் வேந் தர் இவற்றை எனக்கு அனுப்பியதன் உட்பொருள் யாது?'' என்று கேட்டார் கன்னட நாட்டுக்காவலர்.

"எமது வேந்தருக்கு முன்னுல் நீரும் ஓர் அரசர் என்ற பெயருடன் ஆள்வதைவிட, தலைமயிரைச் சிரைத்து மொட்டையடித்துக்கொண்டு, நெற்றியில்

சாம்பலைப் பூசிக்கொண்டு துறவியாகி விடுவது மேலானது என்பதைக் குறிப்பதற்காகத்தான் இவை அனுப்பப்பட்டிருக்கும் என்று எனக்குத் தோன்று கிறது,'' என மொழிந்தார் விசயநகரப் பேரரசின் தூதர்.

அதனைக் கேட்டதும் கன்னட மன்னர் கடுஞ் சினங் கொண்டார். அவர் கண்களில் தீப்பொறி பறந்தது. மீசை துடித்தது. "என்னை ஏளனம் செய்த உமது வேந்தரைச் சும்மாவிடமாட்டேன். அவருக் குத் தக்க பாடங் கற்பிக்கிறேன். விசயநகரத்தைச் சாம்பலாக்குவேன். உமது வேந்தரை நாட்டைத் துறந்து ஓடச் செய்வேன்!'' என்று வஞ்சினம் கூறிச் சினந்து எழுந்தார். படைகளைத் திரட்டிக் கொண்டு விசய நகரத்தின் மீது போர் தொடுக்க ஆயத்த மானுர்.

அப்பாஜி கலிங்கநாட்டை அடைந்து, மன்ன ரைக் கண்டு மனமகிழ்ந்து உரையாடினுர். அதன் பின்னர் அவர் தமது பேரரசின் அன்பளிப்பான பொட்டலத்தை மன்னரிடம் கொடுத்தார். கலிங்கத் தின் காவலர் ஆவலுடன் பொட்டலத்தைப் பிரித்த போது, அதில் சாம்பலும் மயிரும் இருக்கக் கண்டார். அவர் அமைச்சரை நோக்கி, "உமது மன்னர் மயிரும் சாம்பலும் அல்லவோ அனுப்பியுள்ளார்?'' அவ்வாறு அவர் செய்தது ஏன் என்று வினவினுர். அப்பாஜி சிறிதும் தயங்காமல் கலிங்க நாட்டு மக் களைக் கருணை என்னும் பண்பால் அணைத்து அற நெறி தவருது ஆண்டு வரும் அரசர் பெருமானே! எங்கள் வேந்தர் நாடும் மக்களும் நலமுடன் வாழ வேண்டும் என்ற நல்ல நோக்கத்துடன் வேள்வி

யொன்றைச் செய்து முடித்தார். தங்கள்பால் பேரன்பு கொண்டவரான எமது பேரரசர் அந்த வேள்வியின் தூய்மைப் பொருள்களாகிய இவற்றைத் தங்களுக்கு அனுப்பியுள்ளார். தாங்கள் நீடுழி காலம் நிலைபெற்று, நாட்டிற்கு நன்மை புரியவேண்டும் என்ற வாழ்த்துரைகளைத் தங்களிடம் கூறுமாறு எனக்கு ஆணையிட்டுள்ளார். வாழ்க தங்கள் புகழ்! வாழ்க கலிங்கம்!'' எனக் கூறினார்.

அமைச்சர் உரைத்தவற்றைக் கேட்டு கலிங்க மன்னர் களிப்புக்கடலில் மூழ்கினார். விசயநகரப் பேரரசர் தம்பால் கொண்டுள்ள அன்பின் திறத்தை எண்ணியெண்ணி வியந்தார். அவர் அப்பாஜிக்குப் பல பரிசில்களைக் கொடுத்தார்; இராயருக்குப் பல அன்பளிப்புக்களை அனுப்பி வைத்தார்.

கலிங்க நாட்டிலிருந்து களிப்புடன் விசயநகரம் நோக்கி வந்துகொண்டிருந்த அமைச்சர் அப்பாஜி, ஆராய்ந்து கூறும் திறமையற்ற தூதரால் கன்னட நாட்டில் நேர்ந்த குழப்பத்தை உணர்ந்தார். கன்னட நாட்டிற்குச் சென்று, மன்னரைக் கண்டார். அவரிடம் இராயர் தூது அனுப்பியதின் நோக்கத்தை எடுத்துரைத்து, அவருக்கு ஆறுதல் கூறினார். அப்பாஜியின் நயவுரைகள் கன்னட மன்னரின் சீற்றத்தைத் தணித்தன. அவர் விசயநகரத்தின் மீது படையெடுக்கும் நோக்கத்தைக் கைவிட்டார்.

பின்னர் அப்பாஜி அங்கிருந்து விசயநகரத்திற்குச் சென்றார்; வேந்தரைக் கண்டார்; நடந்தவற்றைக் கூறினார். இராயர் அப்பாஜியைப் பாராட்டிப் புகழ்ந்துரைத்தார். பின்னர் அவர் தமது மனைவியாரி

டம் "தேவி! அறிவின் மேன்மையையும், அறிவின்மையால் விளையும் தீமையையும் நன்ருகத் தெரிந்து கொண்டாயா? இப்போது சொல். அமைச்சர் பதவிக்குத் தகுதி வாய்ந்தவர் அப்பாஜியா? நீ விரும்பும் அப்பாவியா?" என்று வினவினுர்.

அரசியார் உண்மையை உணர்ந்தார்; தமது அறியாமையால் நேர்ந்த தவறுகளுக்குப் பெரிதும் வருந்திஞர்; அப்பாஜியின் அறிவாற்றல்களைப் பாராட்டிஞர்; அப்பாஜிக்குப் பதிலாக அறிவற்ற ஒருவரை அமைச்சராக அமர்த்தச் சொல்லியதற்காகத் தம் கணவரிடம் மன்னிப்புக் கேட்டுக்கொண்டார்.

## 7. கவலை இல்லாத மனிதன்

ஒருநாள் கிருட்டிண தேவராயரும், அமைச்சர் அப்பாஜியும் அரண்மனையின் உப்பரிகையில் நின்று வீதியைப் பார்த்துக் கொண்டும், உரையாடிக் கொண்டும் இருந்தனர். இராயர், அப்பாஜி! "இந்த உலகில் நீண்டநாள் வாழவேண்டுமானுல் என்ன செய்யவேண்டும்?" என்ருர். "மன்னர் பெருமானே! நோயற்ற வாழ்வே குறைவற்ற செல்வம் என்பது பெரியோர் கருத்து. நோயற்ற வாழ்வுதான் ஒருவனுக்கு நீண்ட ஆயுளை அளிக்கும். அந்த நோயில் இருவகையுண்டு. ஒன்று உள்ளநோய். மற்ருென்று உடல் நோய். உள்ளத்தில் தோன்றும் நோய் கவலையினுல் உருவாகின்றது. உளநோயைப் பெருக்குகின்ற கவலையே உடல் நோய்க்கும் காரணமாக விளங்குகிறது. எனவே இன்பத்தையும் துன்பத்தையும் சமமாகப் பாவித்து உள்ளத்தில் கவலைக்கு இடங்கொடா

மல் வாழ்பவனே இந்த உலகில் நீண்டநாள் வாழ முடியும்" என்றார் அப்பாஜி.

அவ்வமயம் அரண்மனையைச் சார்ந்த யானைகள் சில வீதியின் வழியாகச் சென்று கொண்டிருந்தன. அவை செல்லும் அழகை இருவரும் பார்த்துக் கொண்டிருந்தனர். அப்போது வீதியின் எதிர்ப்புறத்தில் இருந்து இளைஞன் ஒருவன் யானைகளை நோக்கி அஞ்சாமல் வந்துகொண்டிருந்தான். அவன் முதலில் ஒரு யானையின் இரு தந்தங்களையும் பிடித்து, அதனைப் பின்னுக்குத் தள்ளினான்; அவ்வாறே யானைகள் பலவற்றின் தந்தங்களையும் பிடித்து, அவற்றைப் பின்னுக்குத் தள்ளிவிட்டுச் சென்றான்.

இக்காட்சி இராயருக்கு வியப்பை அளித்தது. அவர், "அப்பாஜி! இந்த இளைஞனின் துணிவைப் பார்த்தாயா? இவனுக்கு இவ்வளவு வலிமையும், துணிவும் எவ்வாறு ஏற்பட்டன?" என்று வினவினார். அப்போது அப்பாஜி, "அரசர் பெருமானே! சற்று முன்பு நான் தங்களிடம் கூறியபடி இந்த இளைஞன் கவலையின்றி வாழ்பவனாக இருப்பான். இவனுக்குக் குடும்பத்தைப்பற்றிய கவலை எதுவும் இருக்காது என்று நினைக்கின்றேன். கவலையில்லாத மனிதனுக்கு எதனைப் பற்றியும் அச்சம் இராது. அதனால்தான் இவன் களிற்றையும் தள்ளவல்ல வலிமை பெற்றிருக்கின்றான்" என்றார்.

அரசர் பெருமான் அமைச்சர் கூற்று உண்மையாய் இருக்குமா என்பதை அறிய விரும்பினார். அவர் அந்த இளைஞனைப்பற்றிய செய்திகளை அறிந்து வரும்படி தம் ஏவலாளருக்கு ஆணையிட்டார். அவர்

கள் அவ்வாறே அவனைப்பற்றிய செய்திகளை அறிந்து வந்து மன்னரைக் கண்டு, "வேந்தே! தங்கள் ஆணைப்படி அந்த இளைஞனைப்பற்றிய செய்திகளை அறிந்து வந்துள்ளோம். அவன் தந்தையை இழந்தவன்; தாய்க்கு ஒரே மகன். அதனால் சீரும் சிறப்புமாக வளர்க்கப்பட்டு வருகின்றான். அவனுக்குக் கவலையோ குடும்பப் பொறுப்போ எள்ளளவும் கிடையாது!" எனக் கூறினார்கள். அவர்கள் கூறியவற்றை அப்பாஜியும் கேட்டுக் கொண்டிருந்தார்.

அவர் அந்த இளைஞனைப் பெற்றெடுத்துப் பேணி வளர்த்து வரும் அன்னையை அழைத்துவரச் செய்தார்; அவளிடம் "அம்மா! நீங்கள் உங்கள் பிள்ளையைக் குடும்பப் பொறுப்பையுணராத முறையில் வளர்த்து வருவது நல்லது அல்ல. அவனது பிற்கால வாழ்வு பெரிதும் பாதிக்கப்படும். அளவுக்கு மீறிய அன்பினால் தாங்கள் அவன் வாழ்வைக் கெடுத்து விடாதீர்கள்," என்றார். அப்போது அந்தப் பெண்மணி அமைச்சரை வணங்கி, "ஐயா! தாங்கள் கூறுவது முற்றிலும் உண்மையே. இளமைப் பருவத்திலேயே தந்தையை இழந்துவிட்ட என் மகன் எவ்வித இன்னலுக்கும் ஆளாகக்கூடாது என்ற நோக்கத்தினால்தான், அவனைச் செல்வமாக வளர்த்து வருகிறேன். அவனுக்கு இப்போது குடும்பப் பொறுப்பை உணர்த்துவது எப்படி? அதற்குத் தாங்கள்தான் வழிகாட்ட வேண்டும்," என்று கூறினாள். "அம்மா! சில நாட்கள் வரையில் அவன் உண்ணும் உணவில் உப்பைச் சேர்க்காதீர்கள். அவன் 'உணவில் உப்பில்லையே' என்பான். 'தம்பீ! நீ இப்படிச் சுற்றித் திரிந்தால் உணவுக்கு

உப்பு எப்படிக் கிடைக்கும்? இனிமேலாவது உழைத்துப் பொருளீட்டி உப்பைத் தேடிக்கொண்டு வா' என்று கூறுங்கள். பிறகு அவன் பொறுப்பை உணர்ந்தவனாக மாறி விடுவான்," என்றார் அமைச்சர்.

அமைச்சர் கூறுவதுதான் தன் மகனைத் திருத்தும் நல்ல வழி என்று அந்தப் பெண்மணி உணர்ந்தாள்; அவரிடம் விடைபெற்றுக்கொண்டு வீட்டிற்குத் திரும்பினாள். அப்பாஜி கூறியவாறே உணவில் உப்பைப் போடாது தன் மகனுக்குப் பறிமாறினாள். அவன் 'உணவில் உப்பில்லையே' என்று கேட்ட போது அமைச்சர் சொல்லித் தந்தவாறே அவனிடம் கூறினாள். அதுமுதல் அந்த இளைஞனின் உள்ளத்தில் கவலை குடிகொண்டது. அவன் 'எப்படி உப்பைத் தேடிக்கொண்டு வருவது? என்று உள்ளங் கலங்கினான்; அந்தக் கவலையினால் உடல் மெலிந்தான்.

நாட்கள் சில கழிந்தன. ஒருநாள் அரண்மனை உப்பரிகையில் இராயரும், அமைச்சரும் நின்று கொண்டு வீதியை நோக்கினர். அப்போது குடும்பப் பொறுப்புணர்ந்து கவலையில் உடல் மெலிந்த இளைஞன் தெருவில் வந்துகொண்டிருப்பதை அமைச்சர் நோக்கினார். அவர் உடனே ஒரு யானையை மட்டும் தெருவில் நடத்திச் செல்லுமாறு ஏவலரைப் பணித்தார்; யானை இளைஞனை எதிர்நோக்கிச் சென்று கொண்டிருந்தது. களிற்றைக் கண்ட அவன் முன்பு போலவே அதனுடைய தந்தங்களைப் பிடித்துக் கொண்டு பின்னுக்குத் தள்ள முயன்றான். அவன் எப்பாடுபட்டும் யானையைத் தள்ளமுடியாமல்

தவித்து நின்முன். அப்போது அந்த யானை அவனைத் தனது துதிக்கையால் ஒதுக்கித் தரையில் தள்ளிவிட்டுச் சென்றது.

இக்காட்சியை அமைச்சர் அரசருக்குக் காண்பித்தார். கவலையற்ற நிலையில் களிறுகள் பலவற்றை மோதித் தள்ளிய இளைஞன், உள்ளத்தில் கவலை சூழ்ந்தபோது வலிமையிற் குறைந்த வகையை விளக்கிக் கூறினர். அரசர் அப்பாஜியின் அறிவுத் திறனைப் பாராட்டினர்; யானையால் தள்ளப்பட்ட சிறுவனை அரண்மனைக்கு அழைத்து வரச்செய்து, அவனுக்கு நல்ல வேலையைக் கொடுத்து நல்வாழ் விற்கு வழிகோலினர்.

## 8. பெண்கள் கூற்றும், அமைச்சர் விளக்கமும்

விசயநகர வேந்தர் ஒருமுறை வேட்டைக்குப் புறப்பட்டார். அமைச்சர் அரசியற் காரியங்களைக் கவனிக்க வேண்டியிருந்ததால், மன்னருடன் செல் லாமல் தலைநகரிலேயே தங்கிவிட்டார். இராயர் வேட்டையிலிருந்து திரும்பும்போது வெப்பம் மிகுதி யாக இருந்தது. கதிரவன் தன் கதிர்களால் இந்த உலகை வருத்திக் கொண்டிருந்தான். மன்னரும், அவருடன் சென்றேரும் குளிர்ச்சி பொருந்திய ஒரு சோலையின் பக்கத்தில் தங்கிக் களைப்பாறினர். அப்போது அச்சோலையைத் தனிமையில் சுற்றிப் பார்த் துக்கொண்டுவந்த மன்னர், ஓர் அடர்ந்த ஆல மரத்தைக் கண்டு அதன் நிழலில் சிறிது நேரம் நின்முர்.

அப்போது அவ்வழியே பெண்கள் மூவர் சென்று கொண்டிருந்தனர். அவர்களுள் ஒருத்தி ஆல மரத்தை உற்று நோக்கித் தன்னுடன் வந்த மங்கை

யர் இருவரையும் பார்த்து, 'காலும் கழியும் ஒன்று, என்று கூறினர். அதனைக் கேட்ட மற்றொருத்தி 'இலையும் இறகும் ஒன்று' என இயம்பினள். அப்போது மூன்றாவது மங்கை நல்லாள், 'வாயும் கனியும் ஒன்று' என்று மொழிந்தாள். பேரரசர் செவிகளில் மங்கையர் உரைத்தவை நன்றாக விழுந்தன. அவற்றின் பொருள் என்ன என்பது அவருக்குத் தோன்றவில்லை.

மன்னர் அரண்மனைக்குத் திரும்பியதும் அவையைக் கூட்டினர். அவையில் அமைச்சர் பெருமக்களும், தானைத் தலைவர்களும், கற்றோரும், மற்றோரும் குழுமியிருந்தனர். இராயர் அவையோரிடம், தாம் வேட்டையிலிருந்து திரும்புங்கால் இடைவழியில் நிகழ்ந்த செய்திகள் யாவற்றையும் விளக்கமாகக் கூறினர்; மங்கையர் மொழிந்த சொற்களின் உட்பொருள் யாதாக இருக்கும் என வினவினர்.

அவையினர் ஒன்றும் கூறாது அமைதியாக இருந்தனர். அவர்களுக்கு அச்சொற்களின் உட்பொருள் யாதென விளங்கவில்லை. அமைச்சர் அப்பாஜி மட்டும் சிறிது நேரம் சிந்தனையில் ஆழ்ந்திருந்திருந்தார். பின்னர் அவர் எழுந்து, வேந்தரை வணங்கி, "அரசர் பெருந்தகையே! மங்கையர் பார்த்துப் பேசிய ஆலமரத்தில் ஒரு கிளி அமர்ந்திருக்க வேண்டும் என்று நினைக்கிறேன். தாங்கள் அந்த மரத்தில் கிளியொன்று இருந்ததைக் கண்டீர்களா?" எனப் பணிவுடன் வினவினர்.

"ஆம், அப்பாஜி! ஆலமரத்தின் கிளையில் அழகிய கிளியொன்று அமர்ந்திருந்ததை நான் பார்த்தேன்," என்றார் இராயர்.

“வேந்தே! அவ்வாருயின் அந்த அணங்குகள் கிளியையும், ஆலமரத்தையும் ஒப்பிட்டுக் கூறும் முறையில் தான் இந்த மூன்று வாக்கியங்களையும் சொல்லியிருத்தல் வேண்டும்,” என்ருர் அப்பாஜி. இராயர் வியப்புடன் “அது எப்படிப் பொருந்தும்?” என வினவினர்.

அமைச்சர், “அரசர் பெருமானே! கிளியின் கால்களும், ஆலமரத்தின் கிளைக்கழிகளும் ஒன்றுபோல் அமைந்திருக்கும். அதனுல்தான் மங்கையருள் ஒருத்தி ‘காலும் கழியும் ஒன்று’ என்று கூறியிருத்தல் வேண்டும். எனது கருத்துப் பொருந்தும் என்று நினைக்கின்றேன். தங்கள் கருத்து யாதோ?” என மொழிந்தார். அரசர் மகிழ்வுடன், “அமைச்சரே! நீர் கூறியது மிகவும் பொருத்தமே. மற்றெருருத்தி ‘இறகும் இலையும் ஒன்று’ என்று கூறியது எதனைக் குறிக்கின்றது?” எனக் கேட்டார்.

“மன்னர் மன்னரே! கிளியின் இறகு போன்று ஆலமரத்தின் இலை காணப்படும். எனவே தான் அவள் ‘இறகும் இலையும் ஒன்று’ என்று இயம்பியிருக்கிருள்,” என்ருர் அப்பாஜி. இராயர் மிக்க மகிழ்ச்சி யடைந்து, “மங்கையருள் மூன்ருமவள் ‘வாயும் கனியும் ஒன்று’ என்று கூறினுளே, அதன் உட்பொருள் யாதாக இருக்கும்?” என வினவினர்.

“வேந்தே! அந்த மங்கையும் கிளியையும் ஆலமரத்தையும் ஒப்பிட்டுத்தான் கூறியிருக்கிருள். ஆலமரத்தின் பழம் சிவந்திருக்கும். அதுபோன்று கிளியின் வாயும் சிவந்திருக்கும். எனவே தான் அவள்

'வாயும் கனியும் ஒன்று' என மொழிந்தாள்,'' என்ருர் அறிவிற் சிறந்த அமைச்சரான அப்பாஜி.

விசய நகரப் பேரரசர், அமைச்சர் தமது நுண்ணறிவினுல் ஆராய்ந்து கூறிய அருஞ்செயலைப் பாராட்டிப் புகழ்ந்தார். அவையோரும் அப்பாஜியைப் போற்றி புகழ்ந்தனர்.

## 9. வயலின் வளம்

இராயர் தமது நாட்டில் வாழும் குடிமக்களுக்கு நேரும் குறைகளை ஒற்றர்கள் வாயிலாக உணர்ந்து அவற்றைப் போக்குவார். சிற்சில சமயங்களில் பேரரசர் தாமே மாறுவேடம் அணிந்து பல இடங்களுக்குச் சென்று மக்களின் நிலையைக் கண்டறிவார். அமைச்சர் அப்பாஜியும் அரசர் பெருமானுடன் செல்வது உண்டு.

ஒரு நாள் இராயரும், அமைச்சரும் வழக்கம் போல மாறுவேடம் அணிந்து நகரத்தின் பல பகுதிகளுக்குச் சென்றனர்; மக்கள் பலருடைய நிலையைக் கண்டறிந்தனர். அதன் பின்னர் அவ்விருவரும் நகர எல்லையைக் கடந்து சென்றனர்; இயற்கையின் உறைவிடமாக விளங்கும் இனிய சோலைகளையும், பச்சைக் கம்பளம் பரப்பினுற் போன்று பச்சைப் பசேலென விளங்கும் பசும்புல் தரையையும், வளமிக்க வயல்களையும் கண்டு களித்தனர். உழவன் ஒருவன் வயலில் உழுது கொண்டிருக்கும் காட்சியை அவர்கள் கண்டார்கள். அவன் மிகுந்த மகிழ்ச்சியுடன் இனிமையாகப் பாடிக்கொண்டே ஏரில் பூட்

டிய காளைகளைச் செலுத்தி உழுவதை இராயர் உற்றுக் கவனித்தார்.

அவர் அமைச்சரை நோக்கி, "அப்பாஜி! பார்த்தீரா இந்த உழவனின் நிலையை! உள்ளத்தில் சிறிதும் சோர்வு இன்றி எவ்வளவு மகிழ்ச்சியுடன் தன்னுடைய தொழிலைச் செய்கிறான்! இவன் அடையும் இன்பத்தில் ஆயிரத்தில் ஒரு பங்குகூட நாம் அடைய முடிகின்றதா?", என வியப்புடன் வினவினார். "அரசர் பெருமானே! தாங்கள் கூறுவது போன்று உழவனின் வாழ்வு உயர்ந்தது என்பதில் சிறிதும் ஐயம் இல்லை. பிறருக்கு அடிமையாகித் தமது உரிமையை இழந்து வாடும் அவல நிலை அவர்களை அணுகுவதில்லை. உலகிற்கு உணவு அளிக்கும் உயரிய தொழிலை மேற்கொண்டிருக்கும் உழவர்களுக்கு ஒப்பாவர் ஒருவரும் இலர். மாற்றாரைப் போர்க்களத்தில் வென்று, மக்கள் நலனைக் கண்ணும் கருத்துமாகப் போற்றுகின்ற மன்னர்கள் அடையும் இன்பத்தைக் காட்டிலும், ஏரைக் கொண்டு சீரைத் தேடுகின்ற உழவர்கள் அடையும் இன்பம் மிகுதியாகும். உழுதொழில் புரிவோர் உலகமாகிய தேருக்கு அச்சாணி போன்றவர். அந்த உழவர்களுக்கு எவ்விதக் குறையும் நேராதவாறு காப்பதே தங்களைப் போன்ற பேரரசர்களின் கடன்," என மொழிந்தார் அப்பாஜி.

இவ்வாறு மன்னரும் மதியமைச்சரும் உரையாடிக் கொண்டிருந்தபோது அவ்வழியே மங்கையர் மூவர் வந்தனர். அவர்கள் உழவர் குடியைச்சேர்ந்த

மகளிர் போன்று காணப்பட்டார்கள். அப்பெண்கள் உழவன் உழுது கொண்டிருந்த வயலை உற்று நோக்கினர்கள். அவர்களுள் ஒருத்தி, "இந்த வயல் முகத்திற்கு ஆகும்" என்று கூறினுள். அதனைக்கேட்ட மற்ருெருத்தி, "நீ கூறுவது தவறு. இது வாய்க்குத்தான் ஆகும்," என மொழிந்தாள். மங்கையர் இருவரது உரையையும் கேட்ட மூன்ருமவள் "இல்லை, இல்லை. இது பிள்ளைக்குத்தான் ஆகும்," என்று கூறினுள்.

அவர்கள் இவ்வாறு குறிப்பாகப் பேசிக்கொண்டு சென்றதை இராயரும், அமைச்சரும் உற்றுக் கேட்டனர். பேரரசருக்கு அவர்கள் கூறியவற்றின் பொருள் புலப்படவில்லை. ஆதலால் அவர் அப்பாஜியை நோக்கி, "அமைச்சரே! இந்தப் பெண்கள் மூவரும் கூறிய சொற்களின் பொருள் யாது!" என வினவினர். அதற்கு அப்பாஜி, "மன்னர் பெருமானே! மங்கையருள் ஒருத்தி 'இந்த வயல் முகத்துக்கு ஆகும்' என மொழிந்தாள் அல்லவா? பூசிக்கொள்ளும் மஞ்சளைப் பயிரிடுவதற்கு ஏற்ற நிலம் இது என்பது அவளுடைய கருத்து. மற்ருெருத்தி 'வாய்க்குத்தான் ஆகும் இந்த வயல்' என்று கூறினுள். வாயில் போட்டுச் சுவைக்கும் வெற்றிலையைப் பயிரிடுவதற்கு ஏற்ற நிலம் இது என்று அவள் எண்ணினுள். வேருெருத்தி 'பிள்ளைக்கு ஆகும்' எனக் கூறினுள் அல்லவா? அவளுடைய கருத்து இந்த நிலத்தில் தென்னம்பிள்ளை வைக்கலாம் என்பதேயாகும்" என மொழிந்தார்.

இராயர் அமைச்சர் கூறியவற்றைக் கேட்டு வியப்பு அடைந்தார். அவர் "அப்பாஜி! ஒரே

வயலைக் கண்டு மங்கையர் மூவரும் மூன்றுவிதமான மாறுபட்ட கருத்துக்களைக் கூறியிருப்பதின் காரணம் என்ன?" எனக் கேட்டார். "அரசர் ஏறே! அது தான் உலக இயல்பு. மக்கள் அனைவருடைய உள்ளக் கருத்தும் ஒன்றுபோல் இருப்பதில்லை. ஒரே பொருளைப்பற்றி ஒவ்வொருவரும் ஒவ்வொரு கருத்துடைய வராக இருப்பதில் வியப்பு ஒன்றும் இல்லை," எனக் கூறினர். அரசர் மிக்க மகிழ்ச்சியடைந்து அமைச்சரின் அறிவுத் திறனைப் போற்றினர்.

## 10. ஏட்டுச் சுரைக்காய் கறிக்கு உதவாது

ஒரு முறை விசயநகர வேந்தரின் அரசவைக்குப் புலவர் ஐவர் வந்தனர். அவர்கள் ஒவ்வொருவரும் ஒவ்வொரு துறையில் தேர்ச்சி பெற்றவர்கள். ஒருவர் இலக்கண நூல்களைச் செம்மையாகக் கற்றுப் பெருமை பெற்றவர். மற்றொருவர் தருக்க நூல்களை மிகுதியாகக் கற்று, அத்துறையில் சிறந்த அறிவு பெற்றவர். வேறொருவர் இசைக் கலையைப் படித்துத் தேர்ந்தவர். மற்றொருவர் சோதிட நூல்களைக் கற்றுப் புலமை பெற்றவர். பிறிதொருவர் மருத்துவக் கலையில் வல்லவர்.

இவர்கள் ஒவ்வொருவரும் தாங்கள் கற்று அறிந்த கல்வியின் சிறப்புக்களை இராயர் முன்னிலையில் வெளிப்படுத்தினர்கள். அப்போது இராயர் மிக மகிழ்ந்து, அப்பாஜியைத் தனிமையில் அழைத்து, "அமைச்சரே! இவர்களுடைய அறிவின் சிறப்பை அறிந்தீர்களா? உண்மையில் இந்த ஐவரும் மிகவும் சிறந்தவர்களே," என்று கூறினர்.

அதற்கு அப்பாஜி " அரசர் பெருமானே! 'ஏட்டுச் சுரைக்காய் கறிக்கு உதவாது' என்பதுபோல இவர்களது அறிவு உலக வாழ்விற்கு உதவாது. இவர்கள் ஒவ்வொருவரும் தாங்கள் கற்ற கல்வித்துறையில் சிறந்த அறிவைப் பெற்றிருப்பினும், உலக அனுபவத்தில் மூடர்களாக இருப்பார்கள் என்பதே எனது கருத்து," என்று கூறினர்.

அமைச்சர் கூறியவற்றைக் கேட்ட இராயர், அவர்களுடைய ஆற்றலே ஆராய்ந்து அறிந்து உண்மையை அறிய விரும்பினர். அரசரது விருப்பத்தை உணர்ந்த அப்பாஜி, "மன்னர் பெருந்தகையே! இந்த ஐவரையும் ஒன்ருகச் சேர்த்து, உணவைச் சமைத்து உண்டுவரும்படி ஆணையிட்டு அனுப்புங்கள். அதிலிருந்து இவர்களின் அறிவுத்திறனே உள்ளவாறு உணர்ந்து கொள்ளலாம்," என்ருர். இராயர், அமைச்சர் கூறியவாறே அந்த ஐவரையும் ஒன்று சேர்த்து, உணவைச் சமைத்து உண்டுவருமாறு அனுப்பினர். அவர்களுடைய நடவடிக்கைகளேக் கண்காணித்து வருமாறு சில ஒற்றர்களேயும் மன்னர் அனுப்பிவைத்தார்.

புலவர்கள் ஐவரும் மன்னர் கூறியவாறே உணவு சமைப்பதற்கு உரிய வேலேகளில் ஈடுபட்டனர். அவர்கள் ஓர் ஆலமரத்தின் அடியில் தங்கி, அங்கேயே உணவைச் சமைத்து உண்ண முடிவு செய்தார்கள். முதலில் இசைக்கலேயில் தேர்ச்சி பெற்றவர் மூன்று கற்களே வைத்து அடுப்பை அமைத்துக் கொண்டார்; நெருப்பை மூட்டிப் பானேயை அடுப்பில் ஏற்றினர்; உலேயில் நீரை ஊற்றினர்; பின்னர் அரிசியைக் களேந்து அதில்

போட்டார்; பின்னர் ஓரிடத்தில் அமர்ந்து பாடத் தொடங்கினுர். சிறிது நேரத்தில் அரிசியுடன் கலந்த உலைநீர் 'தளதள' என்று கொதிக்கத் தொடங்கியது. உடனே இசைப்புலவர் அதற்கு ஏற்றவாறு தாளம் போடத் தொடங்கினுர். அவருடைய தாளத்திற்கு உலைநீர் கொதிக்கும் ஓசை ஒத்து வரவில்லை. அதனுல் அவர் மிகுதியும் சினம் கொண்டு சோற்றுப் பானையைத் தூக்கிப்போட்டு உடைத்து விட்டார்.

தருக்கநூற் புலவர் நெய் வாங்கிவரும் பொருட்டுக் கடைக்குச் சென்ருர். கடைக்காரன் ஒரு தொன்னையில் ஊற்றிக் கொடுத்த நெய்யைப் பெற்றுக்கொண்டு வரும்போது, அவருக்கு ஓர் ஐயம் ஏற்பட்டது. "நெய்க்குத் தொன்னை துணையாக இருக்கின்றதா? அல்லது தொன்னைக்கு நெய் துணையாக இருக்கின்றதா? என அவர் நெடுநேரம் சிந்தித்தார். அவரது ஐயம் தீரவில்லை. இறுதியில் அவர் தமது கையில் இருந்த தொன்னையைத் தலைகீழாகக் கவிழ்த்தார். நெய் முழுதும் மண்ணில் கொட்டி விட்டது. புலவர் அதுபற்றிச் சிறிதும் கவலை கொள்ளவில்லை. தமது செயலின் மூலமாக 'நெய்க்குத்தான் தொன்னை துணையாக இருக்கின்றது' என உணர்ந்து கொண்டார். ஒரு பெரிய உண்மையைக் கண்டுபிடித்துவிட்ட மகிழ்ச்சிப் பெருக்கினுல் அவர் தம்மை மறந்தார்; வெறுங்கையை வீசிக்கொண்டு திரும்பினுர்.

சோதிடநூற் புலவர் இலை பறிக்கச் சென்ருர். அவர் மரத்தின்மீது ஏறி இலைபறிக்கத் தொடங்கி

ஞர். அப்போது பல்லி 'டிக்! டிக்!' என ஒலித்தது. அதனைக் கேட்ட சோதிடர் வாயினல் கணக்குப் போட்டுப் பல்லி சொன்ன பலனை ஆராய்ந்து பார்த்தார். அவ்வாறு பார்த்தபோது 'இந்த நேரத்தில் எந்தச் செயலையும் செய்வது தவறு. அதனுல் பல தீமைகள் விளையும்' என்று தெரிய வந்தது. அதனுல் சோதிடப் புலவர் தாம் அதுவரை பறித்திருந்த இலைகளையும் எறிந்து விட்டு மரத்திலிருந்து கீழே இறங்கினுர்; வெறுங்கையுடன் திரும்பி வந்தார்.

இலக்கணத்தில் வல்லவர் தயிர் வாங்கி வரச் சென்ருர். அப்போது ஒரு பெண் தயிர்க் கூடையைத் தலையில் வைத்துக் கொண்டு 'தயிரோஒஒ தயிர்' என்று கூவிக்கொண்டு வந்தாள். அவள் அவ்வாறு ஒலித்தபோது இலக்கணப் புலவருக்குப் பெருஞ் சினம் தோன்றியது. அவர் தயிர்க்காரியைப் பார்த்து, "ஏ! பெண் பாவாய்! நீ இலக்கணத்தின் இயல்பை அறியாய் போலும்! பேதாய்! பெரும்பிழை புரிந்து விட்டாய். மூன்று மாத்திரை அளவே ஒலிக்க வேண்டிய ஓகாரத்தைப் பத்து மாத்திரை அளவாக ஒலித்தது எற்றிற்கு? அடுக்காது உன் செய்கை? இலக்கணத்தைக்கொலையன்ருே புரிந்து விட்டாய்?" என்று புலவர் பேசும் நடையில் கூறினுர். இவரது சொற்களின் பொருளைப் புரிந்து கொள்ளாத தயிர்க்காரி அவர் தம்மைத் திட்டுவதாக எண்ணிச் சீற்றம் கொண்டாள். அவள் புலவரை வாய்க்கு வந்தவாறு பேசினுள். புலவரும் அவளுடன் நீண்ட நேரம் வாய்ச்சண்டை பிடித்தார். கடைசியில் அவர் தயிரை வாங்காமல் வெறுங்கையுடன் திரும்பினுர்.

மருத்துவ நூலில் அறிவு பெற்றவர் காய்கறி வாங்கும் பொருட்டுக் கடைக்குச் சென்ருர். அவர் அங்குப் பலவிதமான காய்கறிகளைக் கண்டார்; ஒவ்வொன்றின் குற்றங்களையும் ஆராய்ந்து பார்த்தார் ; இறுதியில் ஒன்றும் வாங்காமல் வெறுங்கையுடன் திரும்பினுர்.

இவ்வாருக ஆலமரத்தின் அடியில் உணவைச் சமைத்து உண்ணும் நோக்கத்துடன் கூடிய ஐவரும் தமது அறிவீனத்தால் உணவு உண்ண முடியாத நிலையை அடைந்தனர். பின்னர் அவர்கள் மிகுந்த பசியுடன் திரும்பினுர்கள். இவை அனைத்தையும் ஒற்றர்கள் இராயரிடமும், அமைச்சரிடமும் கூறினுர்கள். அப்பாஜி “அரசர் பெருமானே! இந்த ஐந்து மனிதர்களும் படித்த முட்டாள்கள் என்பது தங்களுக்குப் புரிகின்றது அல்லவா?” என வினவினுர். இராயர் அப்பாஜியின் அறிவை வியந்து போற்றினுர்.

இவ்வாறு விசயநகரப் பேரரசரின் அமைச்சராக இருந்த அப்பாஜியார் தமது அறிவின் ஆற்றலால், பல அருஞ்செயல்களைப் புரிந்தார் ; மக்கள் அனைவராலும் புகழப்பெற்று மதிப்பை அடைந்தார். இவரது வரலாறு மாணவர்களின் வாழ்க்கைக்குச் சிறந்த வழிகாட்டியாகும்.

## பயிற்சிகள்

### 1. நகைச்சுவைப் புலவர் பீர்பால்

1. நகைச்சுவைப் புலவர் பீர்பால் முட்டாள்களுடன் பழகும் முறையை மொகலாயப் பேரரசருக்கு எவ்வாறு உணர்த்தினுர்? ஒரு பக்கத்திற்கு மேற்படாமல் விடை தருக.
2. குழந்தையாக மாறிய பீர்பாலின் குறும்புத்தனத்தை விளக்குக.
3. எருதின்பால் கேட்ட பேரரசரைப் பீர்பால் தமது நுண்ணறிவினுல் வென்ற முறையை விரித்து எழுதுக.
4. பீர்பால் சமையல் செய்த முறையை எழுதுக.
5. பலவகையான குருடர்கள் யாவர்?
6. செல்வச் செருக்கினுல் குருடராக மாறியவர்களைப் பீர்பால் எவ்வாறு கண்டறிந்தார்?
7. கால்களினுல் குருடராக மாறியவர்களை நகைச்சுவைப் புலவர் கண்டறிந்த முறையை எழுதுக.
8. பேரரசர் கிழித்த பெரிய கோட்டைப் பீர்பால் அழிக்காமலும் துடைக்காமலும் சிறிய கோடாக மாற்றியது எப்படி?
9. சாவக நாட்டுச் சிறையில் தான்சேன் எவ்வாறு வருந்தினுர்? நகைச்சுவைப் புலவர் அவரைத் தேற்றிய முறை யாது?
10. தான்சேனும், பீர்பாலும் தப்பிப் பிழைத்தது எவ்வாறு?
11. எண்ணெய் வணிகன் ஏமாற்றுக்காரன் என்பதனைப் பீர்பால் எவ்வாறு மெய்ப்பித்தார்?
12. பீர்பாலின் விண்ணுலகப் பயணத்தைப் பற்றி ஒரு பக்கத்திற்கு மேற்படாமல் எழுதுக.

## 2. அமைச்சர் அப்பாஜி

1. விசயநகரப் பேரரசரின் குணங்களை விளக்குக.
2. அப்பாஜி விசயநகப் பேரரசின் முதலமைச்சராக அமைவதற்குக் காரணமாய் இருந்த நிகழ்ச்சியை விரித்து எழுதுக.
3. டில்லிப் பேரரசர் விரும்பிய பொருள்களை அமைச்சர் அப்பாஜி எவ்வாறு செய்து முடித்தார்?
4. அப்பாஜி, வெண்கலச் சிலைகளின் உயர்வு தாழ்வுகளை எவ்வாறு கண்டறிந்தார்?
5. போலி அரசரை விசயநகர அமைச்சர் புரிந்துகொண்டது எவ்வாறு?
6. இராயரது மனைவியார் அப்பாஜி மீது வெறுப்புக் கொண்டது எதனால்? அவர் தமது கணவரிடம் கூறியவை யாவை?
7. வேந்தரை மதியாதவனுக்கு விதித்தற்குரிய தண்டனையாதென அப்பாஜி கூறினார்?
8. கன்னட நாட்டுக் காவலரிடம் விசயநகரத் தூதர் கூறியது யாது? அதன் விளைவு என்ன?
9. கலிங்க நாட்டு மன்னரிடம் அப்பாஜி உரைத்தவை யாவை?
10. கவலையே வலிமைக் குறைவிற்குக் காரணம் என்பதனை அப்பாஜி எவ்வாறு மெய்ப்பித்தார்?
11. விசயநகர வேந்தர் வேட்டைக்குச் சென்று திரும்பிய போது கண்ட காட்சிகள் யாவை?
12. பெண்கள் கூற்றுக்கு அமைச்சர் அளித்த விளக்கத்தை எழுதுக.
13. இசைக்கலையில் வல்லவர் சோறு சமைத்தது எவ்வாறு?
14. தருக்க நூற்புலவரின் செயலை விளக்குக.
15. சோதிடப் புலவர் இலைபறிக்காது திரும்பியது எதனால்?
16. இலக்கணப் புலவர் அடைந்த இடையூறு யாது?

# KATHAI MANI MALAI

**STANDARD VI**

BY

Pulavar B. MURUGAIAN

BHARATH PUBLISHERS
12, Francis Joseph Street
MADRAS-I

 [Price 75 nP.